




வள்ளலார் கண்ட

# ஆன்மநேய ஒருமைப்பாடு

ம. பொ. சிவஞானம்






தமிழ்நாடு காந்தி நினைவு நிதி, மதுரை-13

# வள்ளலார் கண்ட
# ஆன்மநேய ஒருமைப்பாடு



ம. பொ. சிவஞானம்

தமிழ்நாடு காந்தி நினைவு நிதி
மதுரை-13

53

## பதிப்புரை

நாடு விடுதலை பெற வேண்டுமென்று கூறிவந்ததை விட அதனைப் பெற நாட்டு மக்கள் தங்களைத் தாங்களே தகுதிப்படுத்திக் கொள்ள வேண்டுமென்பதைக் காந்தியடிகள் மிக அதிகமாக வலியுறுத்தி வந்திருக்கிறார். அவருடைய நிர்மாணத் திட்டங்கள் அனைத்திலும் ஊடுருவியிருப்பது தேசிய ஒருமைப்பாடேயாகும். இக்கருத்து நம் தமிழ் மக்களுக்குப் புதிதன்று. "வாழ்க வாழ்க உலகெலாம்" என்பது தொன்று தொட்டு நம்மிடையே இருந்து வரும் கோஷம். அடிகளார் காலத்திற்குச் சற்று முன்பாக நம் தமிழகத்தில் தோன்றிய இராமலிங்க வள்ளற் பெருமானார் தேசிய ஒருமைப்பாட்டை உள்ளடக்கிய 'ஆன்மநேய ஒருமைப்பாடு' என்னும் புதிய கோஷத்தை அளித்தார்.

**திரு. ம. பொ. சி.** அவர்கள் நாட்டு விடுதலை இயக்கத்தின் பல போராட்டங்களில் ஈடுபட்டவர்; அரசியல் விடுதலைக்குப் பிறகும் தமிழன் தலை நிமிர்ந்து நிற்கப் பல தொண்டுகள் ஆற்றியவர். அவற்றுள் அவர் எழுதியுள்ள "**வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு**" என்னும் ஆராய்ச்சி நூலும் ஒன்றாகும். இதில் "**ஆன்மநேய ஒருமைப்பாடு**" என்னும் கருத்தை வள்ளலார் கொடுத்து, வளர்த்துள்ள விதத்தைத் **திரு. ம. பொ. சி.** அவர்கள் தமக்கே உரிய எளிய நடையில் விளக்கியுள்ள அழகே தனி. தமது நூலிலிருந்து இந்தக் கையேட்டினைத் தொகுத்து வெளியிட அனுமதி அளித்த ஆசிரியர் **திரு. ம. பொ. சி.** அவர்களுக்கு எங்கள் மனமார்ந்த நன்றி.

நாட்டுப் பற்றும் 'ஜெய் ஜகத்' (வாழ்க வையகம்) என்ற நோக்கமும் கொண்ட தமிழ்ப் பெருமக்களின் முன்னால் இந்தச் சிறு கையேட்டினை வைப்பதில் காந்தி நினைவு நிதி பெருமை கொள்கிறது.

மதுரை-13
29-10-70

ம. மு. விசுவநாதன்
செயலாளர்
தமிழ்நாடு காந்தி நினைவு நிதி

பொருளடக்கம்

# 1 மறுமலர்ச்சி

பாரதம், அரசியல் - பொருளாதாரத் துறைகளிலே அடிமைப்பட்டதென்றுலும், அதன் விளைவாகவும், ஒரு 'நன்மை' ஏற்படத்தான் செய்தது. ஆம்; சமயத் துறையில் 'மறுமலர்ச்சி' தோன்ற வழி பிறந்தது. இந்து மதத்திலுள்ள பழைய நம்பிக்கைகளுக்கு, பழக்க வழக்கங் களுக்கு 'மூடநம்பிக்கைகள்' எனப் பெயர் வைத்து, அவற்றிற்கு எதிராகப் பிரசாரப் போர் நடத்தினர் கிறித்துவப் பாதிரிகள். அதனுல், ஆயிரம் ஆண்டுகளுக்கு மேலாக எதிர்ப்பின்றி வளர்ந்த புரோகித மதம் எதிர்ப்பைக் கண்டு விட்டது.

சாதியால் - மதத்தால் ஒடுக்கப்பட்டுக் கிடந்த மக்களிடையே கிறித்துவப் பாதிரிகளின் பிரசாரம் உள்ளொளியை ஏற்படுத்தியது. பாதிரிகள் வெறும் மதப் பிரசாரத்தோடு நின்று விடாமல், தாழ்த்தப்பட்டுக் கிடந்த இந்து மக்களை அணுகி, அவர்கள்பால் அன்பு காட்டி, ஆக்க வழியிலும் தொண்டு புரிந்தனர்; கல்வி, சுகாதாரம், குடியிருப்பு ஆகியவற்றில் தாழ்த்தப்பட்ட வர்களுக்கு உதவி புரிந்தனர். இதனுல் சேரிகளிலும், குடிசைப் பிரதேசங்களிலும் பல நூற்றுண்டுகளாகச் 'சிறை' வைக்கப்பட்டிருந்த இந்துக்களுள் பலர் கிறித்துவ மதத்தில் சேரலாயினர். அவர்கள் எண்ணிக்கை கொஞ்சமன்று; கோடி, கோடியாகும்.

இந்தியாவில் ஏற்பட்ட இந்த மாறுதல், இந்து மதத்திலுள்ள படித்தவர் சிலரிடையே அதிர்ச்சியை உண்டாக்கியது. இந்து மதத்தைப் புனருத்தாரணம் செய்ய வேண்டுமென்ற எண்ணத்தையும் ஏற்படுத்தியது. இந்துக்களிடையே உள்ள தத்துவ பேதங்கள், மத பேதங்கள், சாதி பேதங்கள் - காரணமாக, இந்திய சமுதாயம் ஒற்றுமையின்றிச் சுக்குநூருக உடைக்கப் பட்டுக் கிடப்பதை உணர்ந்தனர்.

*1757*-முதல் *1857* வரையுள்ள ஒரு நூற்ருண்டுக் காலத்திலேயே, மத மாற்றம் அதிகரித்தது. அதன் விளைவாக, படித்த இந்துக்களிடையே மனமாற்றம் ஏற்படலானது. கிறித்து மதத்தின் வளர்ச்சியால் இந்து மதம் நலிவது பற்றியோ, அந்த மதத்தின் துணை கொண்டு காலூன்றிய பிரிட்டிஷ் ஆதிக்கம் இழைக்கும் இன்னல்கள் பற்றியோ சமுதாயத்தின் அடித்தளத்தி லிருந்த சாதாரண மக்கள் அதிகமாகக் கவலைப்பட வில்லை. காரணம், அவர்களெல்லாம் ஏற்கனவே உள் நாட்டவராலேயே சுரண்டப்பட்டும், ஒடுக்கப்பட்டும் வந்ததுதான். இந்த நிலை, சமுதாயத்தில் செல்வாக்குப் பெற்றிருந்த படித்த மக்களுள் சிலரையேனும் சிந்திக்க வைத்தது. உயர்தர-நடுத்தர மக்களுள் சிலரிடையே தோன்றியிருந்த இந்தப் புத்துணர்ச்சி, மகத்தான தொரு சமயப் புரட்சி நடத்தும் தலைவர்கள் தோன்று வதற்கான சூழ்நிலையைத் தோற்றுவித்தது. பின்னே தோன்றவிருந்த அரசியல் புரட்சிக்கு முன்னேடியாகச் சமயப் புரட்சி ஏற்பட வேண்டுமென்பது தெய்வத்தின் திருவுள்ளம் போலும்!

## 2 புதிய கோஷம்

இந்தச் சூழ்நிலையில், மத வெறியை அழித்து, மத நெறியை வளர்க்கும் மகான்கள் தேவைப்பட்டனர். இந்து-முஸ்லிம்-கிறித்துவ மதங்கள் ஒன்றுக்கொன்று எதிரும் புதிருமான இராணுவ முகாம்களாக விளங்கிய அவல நிலையை மாற்றி, அவற்றிடையே சமரச மனோ பாவத்தை வளர்க்கத்தக்க சன்மார்க்க ஞானியர் தேவைப்பட்டனர். சுருங்கச் சொன்னால்,

பிற சமயங்களின் படையெடுப்பால் அழிந்து கொண்டிருந்த பாரதக் கலாசாரத்தைக் காக்கவும்,

இந்து - முஸ்லிம் - கிறித்துவ சமயங்களிடையே ஒருமைப்பாடு காணவும்,

இந்துக்களிடையே நிலவிய மூடநம்பிக்கைகளை சாதி வழிப்பட்ட உயர்வு-தாழ்வு மனப்பான்மைகளை, போலி வைதிகர்களின் புரட்டுச் சடங்குகளை அடியோடு அழிக்கவும் புரட்சிகரமான சீர்திருத்தவாதிகள் தேவைப் பட்டனர். இந்த நிலையில், தேவதூதராலன்றிச் சாதாரண மக்களால் பரிகாரம் காணமுடியாத ஒரு பெருங்கேட்டிற்குப் பாரதத்தின் பூர்வ மதம் இரையாகி யிருந்தது. இந்தக் குழப்பத்திற்கு நடுவே 1774-ஆம் ஆண்டுதொடங்கி 1836-ஆம் ஆண்டு வரையுள்ள ஒரு காலகட்டத்தில் பாரதப் புண்ணிய பூமியில் தேவ தூதர்

நால்வர் ஒருவர்பின் ஒருவராகத் தோன்றினர். அவர்கள் முறையே இராசாராம் மோகன்ராய், இராமலிங்கர், தயானந்த சரஸ்வதி, இராமகிருஷ்ணர் ஆகியோர் ஆவர். இவர்கள் வேதாகம-சாத்திரங்களுக்குக் கட்டுப் படாத ஒரு சமுதாயத்தை, தெய்வ நெறியை - அந்த நெறியின் வழி சென்று அடையக் கூடிய தெய்வநிலையை உலக மக்கள் அனைவருக்குமாகப் போதித்தனர். அந்த வகையில் மற்ற மூவர்களைவிட மிகத் தீவிரமான புரட்சிக் காரராய் விளங்கினார் இராமலிங்கர்.

'தெய்வம் தெளிமின்' என்றுரைத்த இளங்கோ வடிகள், 'தெளிந்தோர்ப் பேணுமின்' என்றுங் கூறினார். இராமலிங்கர், தெய்வம் தெளிந்த மெய்ஞ்ஞானியரைத் தேடியலைந்தார். அத்தகையோர்க்குத் தொண்டு செய்ய விழைந்தார். இதனை,

*''எத்துணையும் பேதமுறு தெவ்வுயிரும்*
*தம்முயிர்போல் எண்ணி யுள்ளே*
*ஒத்துரிமை உடையவராய் உவக்கின்றார்*
*யாவர் அவர் உளந்தான் சுத்த*
*சித்துருவாய் எம்பெருமான் நடம்புரியும்*
*இடமெனநான் தெரிந்தேன் அந்த*
*வித்தகர்தம் அடிக்கேவல் புரிந்திடஎன்*
*சிந்தைமிக விழைந்த தாலோ''*

என்று அவர் பாடியதால் அறிகிறோம். இந்தப் பாடலிலே, சாதி-சமயம், இன்ன பிற வேற்றுமைகள் பாராட்டாதவராய், தம்முயிர் போலப் பிற உயிர்களையுங் கருதி அன்பு செலுத்துபவராய், உதட்டளவில்லாமல் உள்ளத்தால் ஒருமைப்பாட்டினை விரும்புகின்றவராய்

உள்ள உத்தமர் எவரோ, அவருடைய திருவுள்ளமே இறைவன் நடம் புரியும் இடம் என்றும், அத்தகைய வித்தகச் சித்தர்களுக்குத் தொண்டு புரியத் தம் உள்ளம் விரும்புவதாகவும் கூறுகின்றார்.

இராமலிங்கர் தேடிய அந்த வித்தகச் சித்தர், அவர் காலத்திலேயே வடகிழக்கே கல்கத்தாவில் வாழ்ந்தார். அவர் பெயர் இராமகிருஷ்ணர். அடிகளார் காலத்திற்குப் பிறகு தோன்றிய காந்தியண்ணல், உள்ளத்தால் பொய்யாதொழுகி, உலகத்தார் உள்ளத்துளெல்லாம் கோயில் கொண்ட உத்தம ஞானியாவார். இராம கிருஷ்ணரும் காந்தியடிகளும் இராமலிங்கரைப் போன்றே இரண்டாடை - வெள்ளாடை அணிந்த துறவிகளாக வாழ்ந்து மறைந்தனர்.

இராமலிங்கர், ஆடையணிவதில் காட்டிய அடக்கத்தை, தம் வாழ்க்கையில் ஒவ்வொரு துறையிலுமே கடைப் பிடித்தார்; பேசுதல், நடத்தல், நிற்றல், இருத்தல் ஆகிய ஒவ்வொன்றிலும் அடக்கத்தை வெளிப் படுத்தினர்.

> "அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
> ஆரிருள் உய்த்து விடும்"

என்ற குறட்பாவின் விரிவுரை அடிகளாரின் வாழ்க்கை வரலாறு. உடம்பு தடிப்பதையும் வெறுத்தவராகி,

> "தளைத்திடும் ஊண் உடம் பொருசிறிதுந்
> தடித்திட நினைத்திலேன் இன்றும்
> இளைத்திட விழைகின்றேன் இதுநான்முன்
> இயம்பலென் நீ அறிந்ததுவே."

எனப் பாடுகின்றார் பெருமான். இளைத்த உடம்பையும் வெள்ளாடையால் மறைத்து வாழ்ந்த பெருமான், உயர்ந்த ஆசனத்தில் அமரவும் விரும்பினாரல்லர். இதனை,

*"காட்டுயர் அணைமேல் இருக்கவும் பயந்தேன்*
*காலின்மேல் கால்வைக்கப் பயந்தேன்"*

என்ற அருட்பாவால் அறிகிறோம். அவர் ஒவ்வொரு ஆன்மாவையும் பரம்பொருளின் அமிசமாகவே கருதினாராதலால், உயர்ந்த ஆசனத்தில் தாம் அமர்ந்தால், அச்செயல் தாழ்ந்த இடத்திலுள்ள ஆன்மாக்களை அவமதித்ததாகி, தெய்வ நிந்தனை செய்த பாவம் நேருமோ என்று அஞ்சினார். இதே பொருளில்தான்– "பார்க்கின்ற மலரூடு நீயே யிருத்தி; அப்பனிமலர் எடுக்க மனமும் நண்ணேன்" என்றார் தாயுமானவர்.

அருட்பா தந்த அருளாளர், தம்மை ஓர் அற்ப மனிதராகவே கருதினார். பிற மனிதரை விட–ஏன்? பிறிதொரு உயிரைவிடத் தாம் உயர்ந்தவர் என்ற எண்ணம் அவரிடத்தில் இருக்கவில்லை; பரம்பொருள் படைத்த உயிர்களனைத்தையும் சமமாகவே மதித்தார். அந்த உயர் குணத்திலிருந்து பிறந்ததே '**ஆன்மநேய ஒருமைப் பாட்டுரிமை**' என்ற அவரது புதிய கோஷம்.

## 3 சன்மார்க்க சங்கம்

கருணையே மனித வடிவந்தாங்கி வந்தாற் போன்ற இராமலிங்க அடிகளார், தம் தொண்டர் குழாத்துடன், காலங் கொடுத்த அழைப்பை ஏற்றுக் கடலூரிலிருந்து வடலூரை அடைந்தபின், அங்கு நிரந்தரமாகத் தங்கி, சாதி-சமய பேதங்களற்ற சன்மார்க்க சமுதாயத்தைக் காணும் புதிய பணியைப்-புண்ணியத் தொண்டைத் துவக்கினர்.

அன்னிய ஆட்சியேயன்றி, நாட்டில் நல்வாழ்வு பெற்றிருந்த சாதி வெறி-மதவெறிக் கூட்டங்களும் அல்லலுற்ற மக்களுக்கு ஆதரவாக இல்லை. உயர்சாதிக் கொடுமையால், தாழ்சாதி மக்கள் தாங்குவாரற்றுத் தவித்தனர். சமூகத்தில் தலைமை பெற்றிருந்த புரோகித வர்க்கம்-"மக்களுடைய பசிக்கு அவரவர் தலையெழுத்தே காரணம்" என்று 'பஞ்சாங்கயிஸம்' பேசியது. நாட்டின் வறுமை நிலை கண்டு வருந்தினர் இராமலிங்கர். மக்கள் வறுமை கண்டு நெஞ்சம் வருந்தியதனல், புதியதொரு சன்மார்க்க சமுதாயங் காண விரும்பிய அடிகளார், அதற்கான ஆரம்பப் பணி மக்களுடைய பட்டினியைப் போக்குவதேயென அறிந்தார். ஆன்மநேய ஒருமைப்பாடு காணும் துவக்கப் பணியாக 22-5-1867ல் சத்திய தரும சாலைக் கட்டிடத் திறப்பு விழாவும் அன்னதானப் பணி துவக்க விழாவும் நடைபெற்றன.

அடிகளார், பத்தொன்பதாம் நூற்றுண்டில் ஏழைகளின் பசி தீர்க்க வந்த 'மணிமேகலை' யெனக் காட்சியளித்தார். சத்திய தருமசாலை, அவர் கையிலிருந்த அக்ஷய பாத்திரமாக விளங்கியது. அத்துறையில், அவர் இந்நாளைய மதத் தலைவர்கள்-மடாதிபதிகளுக்கேயன்றி, அரசியல் கட்சித் தலைவர்கள்-ஆட்சித் தலைவர்களுக்கும் ஒருண்மையை உணர்த்தியுள்ளார். அதாவது, மக்களிடையே ஒழுக்கம் வளர வேண்டுமானுல், தேசிய-சர்வ தேசிய ஒருமைப்பாடு ஓங்கவேண்டுமானுல், முதலில் பசிப்பிணியிலிருந்து அவர்களை விடுவிக்க வேண்டும் என்பதாகும். உலகில் சமாதானம் நிலவவும் அது ஒன்றே மார்க்கம். அதனுற்றுன், பிரபஞ்சம் முழுவதற்குமான ஆன்மநேய ஒருமைப்பாட்டினை வலியுறுத்திய அடிகளார், முதலில் பசிபோக்கும் பணியிலீடுபட்டார் என அறிதல் வேண்டும்.

இராமலிங்க வள்ளலார் மனித சமுதாயத்திலே மகத்தானதொரு பொருளாதாரப் புரட்சி ஏற்பட வேண்டுமென விரும்பினுர். கம்பர் ஏழையும் பணக்காரருமில்லாத ஒரு சமதர்ம சமுதாயத்தைக் கற்பனை செய்து, அதனைக் கோசல நாட்டில் கண்டவர்போல, "வண்மை இல்லையோர் வறுமை இன்மையால்" என்றும், "எல்லாரும் எல்லாப் பெருஞ் செல்வமும் எய்தலாலே இல்லாருமில்லை உடையார்களும் இல்லை" என்றும் பாடினுரோ, அந்த அடிப்படையிலே புது உலகம் காண வள்ளலாரும் விரும்பினுர். அதற்கான முதற்பணியாக ஏழை மக்களுடைய பசி போக்கும் தொண்டில் ஈடுபட்டு வடலூரில் சத்திய தரும சாலையைத் துவக்கினுர். "ஆன்ம நேய ஒருமைப்பாட்டுரிமை" என்று அடிகள் கொடுத்த கோஷத்திலே, சாதி-சமய ஏற்றத் தாழ்வு

களேயன்றி, ஏழை-பணக்காரன் என்ற ஏற்றத் தாழ்வும் ஒழிந்த தன்மையும் அடங்கி இருப்பதாகவே கொள்ள வேண்டும்.

*"உள்ளலேன் உடையார் உண்ணவும் வறியார்*
*உறுபசி உழந்துவெந் துயரால்*
*வள்ளலே நெஞ்சம் வருந்தவும் படுமோ*
*மற்றிதை நினைத்திடுந் தோறும்*
*எள்ளலேன் உள்ளம் எரிகின்ற துடம்பும்*
*எரிகின்ற தென்செய்வேன் அந்தோ!*
*கொள்ளலேன் உணவும் தரிக்கிலேன் இந்தக்*
*குறையெலாம் தவிர்த்தருள் எந்தாய்"*

என்னும் வரிகளிலே, மனித சமுதாயம் 'உடையார்-வறியார்; பணக்காரர்-ஏழை' என்று பிளவுபட்டிருப்பதை நினைப்பூட்டி அந்த வர்க்கப் பிரிவு காரணமாக வறுமையாளர் பசியால் வருந்துவதை எடுத்துக் காட்டி, இந்தக் கொடுமைகளகன்று,

*"ஒத்தாரும் உயர்ந்தாரும் தாழ்ந்தாரும் எவரும்*
*ஒருமையுள ராகி உலகியல் நடத்த வேண்டும்,"*

என்று பாடுகின்றார்.

சன்மார்க்க சமுதாயம் காண விழைந்த வள்ளலார், தொண்டர் பல்லாயிரவர் கூடிய சங்கத்தின் மூலமே அதனைச் சாதிக்க முடியுமென்பதை உணர்ந்தார். தனியாக ஒரு சங்கமே அன்றி, சங்கத்தைச் சார்ந்த-சன்மார்க்கர்கள் மட்டுமே கூடி வழிபடத்தக்க-கோயில் ஒன்றையும் கண்டு, தாம் அந்த கோயிலிலேயே தங்கி, இறைவழிபாடு நடத்த வேண்டுமென்று தமக்கிருந்த விருப்பத்தை வெளியிடுகின்றார்.

தெய்வத் திருவருளால் திண்ணிய நெஞ்சம் பெற்ற இராமலிங்கர், 1865-ம் ஆண்டில் சமரச சுத்த **சன்மார்க்க சங்கம்** என்ற அமைப்பினைத் தோற்றுவித்தார்.

அந்த அமைப்பு சாதி-சமய-மொழி-நாடு என்னும் வேற்றுமைகளையெலாம் கடந்து, பிரபஞ்சம் முழுவதிலும் இயங்கத்தக்கதாக உயிர்க்குலம் அனைத்துக்குமே பிரதிநிதித்துவம் உடையதாக விரிவடைய வேண்டுமென்பது வள்ளலாரின் விருப்பம். அதனால், சமரச சுத்த சன்மார்க்க சங்கத் தலைமைப் பொறுப்பைத் தாம் ஏற்காமல், எல்லாம் வல்ல ஆண்டவனையே-சபாநாயகரையே சங்கத்தின் தலைவராக வைத்தார். இதனை,

*"சமரச சன்மார்க்க சங்கத்தின் முதலே*
*தனிநட ராஜவென் சற்குரு மணியே!"*

*"சன்மார்க்க சங்கத்தார் தழுவிய பதியே*
*தனிநட ராஜவென் சற்குரு மணியே!"*

*"செத்தவர்கள் எல்லாம் திரும்ப எழுந்துவரச்*
*சித்தம் வைத்துச் செய்கின்ற சித்தியனே-சுத்தசிவ*
*சன்மார்க்க சங்கத் தலைவனே நிற்போற்றும்*
*என்மார்க்கம் நின்மார்க்க மே."*

என்னும் பாடல்களால் அறிந்து கொள்ளலாம். சங்கத்தின் அங்கத்தினர்களோ, படமாடும் பெருமானுக்குப் பதிலாக, கண்ணெதிரே நடமாடும் பெருமானாகிய இராமலிங்கரையே சங்கத் தலைவராகக் கொண்டு, அவரை வாழ்த்தியும் வணங்கியும் வழிபடலாயினர். அதுகண்டு வள்ளலாரின் மனம் வருந்தியது.

*"சன்மார்க்க சங்கத்தீர் சிற்றடியேன் உமது*
*தாள்வணங்கிச் சாற்றுகின்றேன் தயவினெடுங்*
*கேட்பீர்*
*என்மார்க்கத் தெனை நுமக்குள் ஒருவன்எனக் கொள்வீர்*
*எல்லாஞ்செய் வல்லநம திறைவனையே தொழுவீர்"*

என்று பாடி, அறிவுரை கூறினர்.

வள்ளலார் துவக்கிய சமரச சுத்த சன்மார்க்க சங்கம், ஆகமங்கள்-புராணங்கள்-சாத்திரங்கள் ஆகிய வற்றிற்கு எதிராகப் போரிட முயலாமல், அவற்றிற்கு அப்பாற்பட்ட சமயங்கடந்த சமுதாய அமைப்பாக இயங்கியது.

தமிழகத்தின் வரலாற்றிலே முதன் முதலில் தோன்றிய சமய சமூக சீர்திருத்த அமைப்பு, வள்ளலார் துவக்கிய சமரச சன்மார்க்க சங்கமேயாகும். பிற மதங்களைப் போலத் தானும் ஒரு மதமாகச் சங்கம் தோன்றவில்லை. மதங்களற்ற ஒரு சன்மார்க்க சமுதாயத்தைத் தோற்றுவிப்பதற்கான சேவா சங்கமாகவே தோன்றியது. இறுதியில் மனித சமுதாயம் முழுவதுமே ஓர் சன்மார்க்க சங்கமாகி, அதிலே தம்மால் துவக்கப் பட்ட சங்கம் இரண்டறக் கலந்துவிட வேண்டும் என்பது வள்ளலாரின் விருப்பம்.

"ஜீவகாருண்ய ஒழுக்கத்தைக் கடைப்பிடித்து புலால் உணவை வெறுத்து, தயவுடைய மனத்தினர் எல்லாரும் சன்மார்க்க சங்கத்தில் சேரலாம்" என்ருர் வள்ளலார்.

சங்கத்தின் அங்கத்தினர் எல்லாம் "உறவினத்தார்" என்றும், ஏனையோரெல்லாம் "புறவினத்தார்" என்றும்

பிரித்துக் கூறினர் வள்ளலார். இறுதியில் இந்தப் பேதமும் அழிந்து, மனிதர் எல்லாருமே ஒரே இனத்தவ ராக-அதாவது, சுத்த சன்மார்க்க இனத்தவராக மாறி விடுவர் என்பது இராமலிங்கரின் நம்பிக்கை.

"எவ்வுலகும் அண்டங்கள் எத்தனையும் நான்காண
இவ்வுலகில் எந்தை எனக்களித்தான்-எவ்வுயிரும்
சன்மார்க்க சங்கம் தனைஅடையச் செய்வித்தே
என்மார்க்கம் காண்பேன் இனி."

வள்ளலார் சன்மார்க்க சங்கம் கண்டது, இறைவன் அருள் கைவரப் பெற்ற காலத்திலாம்.

சன்மார்க்க சங்கத்தின் கொள்கைகளை அடிகளார் பட்டியல் தொகுத்து வெளியிட்டதாகத் தெரியவில்லை. ஆயினும், அவருடைய பாடல்களிலே, வசன உபதேசங் களிலே, அவர் தம்முடைய சீடர்களுக்கு எழுதிய கடிதங் களிலே, சன்மார்க்க சங்கத்தின் கொள்கைகள் பரவலாகக் காணப்படுகின்றன. அவற்றைக் கீழ்வருமாறு தொகுத்துப் பார்க்கலாம்:

(1) உயிர்க்குலம் அனைத்துக்கும் தெய்வம் ஒன்றே என்று நம்புதல்.

(2) அந்தத் தெய்வத்தை விக்கிரக வடிவில் அல்லாமல் ஒளி வடிவிலே வழிபடுவதே சிறந்ததென உணர்தல்.

(3) சாதி-சமய-வருண பேதங்களை அறவே விடுத்து, மொழி வழிப்பட்ட இனங்கள்-நாடுகளிடையே ஒற்றுமை கண்டு, ஆன்மநேய ஒருமைப்பாட்டினை உருவாக்கல்.

(4) உலகம் முழுவதையும் ஒன்றுபடுத்தும் ஆன்ம நேய ஒருமைப்பாட்டினுக்கேயன்றி, இந்திய நாட்டில்-மொழிவழி இனங்களிடையே சகோதர உணர்வை வளர்த்து, அவற்றிடையே உணர்ச்சி பூர்வமான ஒருமைப்பாடு காணல்.

(5) உடைமையாளர்-வறுமையாளர் (பணக்காரர்-ஏழை) என்ற பொருளாதார ஏற்றத்தாழ்வைத் தொலைத்து, எல்லாரும் வயிறுர உண்டு, உடம்பார உடுத்து வாழும் சமதர்ம சமுதாயத்தைப் படைத்தல்.

(6) ஆண்-பெண் என்ற பால் வேற்றுமையின்றி, மக்கள் எல்லாருக்குமே கல்வி அளித்தல்-குறிப்பாக, ஞானமார்க்கக் கல்வியைப் பெண்களுக்கும் அளித்தல்.

(7) மரணமிலாப் பெருவாழ்வு வாழும்பேற்றினைப் பெறுவதற்கான வழி வகைகளை மக்களுக்கு அவரவர் தாய்மொழியின் வாயிலாகவே குறிப்பாகத் தமிழருக்குத் தமிழின் வாயிலாகவே பயிற்றுவித்தல்.

(8) புலால் உண்ணுதல், தெய்வத்திற்கு உயிர்ப் பலி தருதல் ஆகிய தீய பழக்க-வழக்கங்களை அடியோடு ஒழித்தல்.

(9) உயிர்கள் அனைத்தையும் சமமாகக் கருதி, அவற்றிடையே இரக்க உணர்வும் தயையும் காட்டத் தக்க ஜீவகாருண்ய ஒழுக்கத்தை மக்களுக்குப் போதித்தல்.

(10) கருணையிலாத் துன்மார்க்கர் அரசியல் நடத்துவதை உலகெங்கணுமிருந்து ஒழித்து, அருள்நெறி வழிப்பட்ட சுத்த சன்மார்க்கர் ஆட்சி தோன்றச் செய்தல்.

வள்ளலார், சாதிகளையும், சமயங்களையும் மதங்களையும் அடியோடு வெறுத்தார். இதனை அவரே தம் பாடல்களிலே ஐயந்திரிபுக்கு இடமின்றி அறிவிக்கின்றார். ஆயினும், "தோற்பன தொடரேல்" என்னும் முதுமொழி அவருக்குத் தெரியும். அதனால் செயலாற்றப் புகுந்தபோது சமரச உணர்ச்சிக்கே முதலிடம் தர எண்ணியவர் போலத் தாம் துவக்கிய சங்கத்தின் பெயரிலே, "சமரசம்" என்பதனை முதற் சொல்லாக்கினார். ஆம்; சாதிகளை ஒழிக்கு முன்பாக, சாதிகளிடையே நிலவி வரும் ஏற்றத்தாழ்வினை - இழிவு சிறப்பினை ஒழித்து அவற்றிடையே சமரசம் காண விரும்பினார்.

சமயங்களற்ற சமுதாயம் காண்பதற்கு முன்பாக, அச்சமயங்களிடையே நிலவி வரும் வேற்றுமைகளையும்-விரோதங்களையும் ஒழித்து, அவற்றிடையே சமரசம் காண்பதையே முதற்கடமையாகக் கொண்டார். இதனை,

*"இச்சாதி சமயவிகற் பங்களெலாந் தவிர்ந்தே*
*எவ்வுலகுஞ் சன்மார்க்கப் பொதுவடைதல் வேண்டும்,"*

என்னும் அருட்பா வரிகளிலே ஐயந்திரிபற அறிவிக்கின்றார்.




# 4 வழிபாட்டு முறை

தம்முடைய கற்பனையிலுள்ள இலட்சிய சமுதாயத்தின் குடிமக்களாக சன்மார்க்க சங்க அங்கத்தினர்களை அடிகள் கருதினராதலால், சமயங்கடந்த ஒரு சமுதாயத்தின் முதல் கோயிலாக ஞான சபையைப் படைத்து, அதிலே உருவ வழிபாட்டிலிருந்து வேறுபட்ட ஒளிவழிபாட்டு முறையை ஏற்படுத்தினர்.

அந்த வழிபாட்டில் கலந்துகொள்வோர், இறைவனை, சமய சன்மார்க்கிகள் குறிப்பிடும் பெயர்களால் அல்லாமல், சர்வ சமயத்தாரும் ஏற்கத்தக்க பொதுப் பெயர்களால் குறிப்பிட்டு வழிபட வகை செய்தார்.

சன்மார்க்க அடியவர்கள் இறைவனை நோக்கி விண்ணப்பித்துக் கொள்ளுங்கால்,

*"தனித் தலைமைப்பெரும்பதியாகிய பெருங் கருணைக் கடவுளே!"*

*"கருணைநிதியாகிய கடவுளே!"*

*"களைப்பறிந்துதவும் கருணைக் கடலாகிய கடவுளே!*

*"சர்வ வல்லபராகிய தனித்தலைமைக் கடவுளே!"*

*"எல்லாமாகிய தனிப்பெருந் தலைமை அருட்பெருஞ்சோதி ஆண்டவரே!"*

*"இயற்கை யுண்மைக் கடவுளே!"*

*"இயற்கை இன்பக் கடவுளே!"*

இது காந்தியடிகள் தெரிவித்த கருத்தாகும். இதைத்தான், "ஊன்றிய வேதாகமத்தின் உண்மை நினக்காகும், உலகறி வேதாகமத்தைப் பொய்யெனக் கண்டுணர்வாய்," என்று கடவுள் தமக்குணர்த்திய தாகக் கூறுகின்ருர் வள்ளலார்.

ஞானிகள் எங்கு-எந்தக் காலத்தில் பிறந்தாலும், அவர்கள் ஒரே 'பாஷை'யில் தான் பேசுகின்றனர். அது நமக்குப் புரிவதில்லே. அதோடு, 'என்ன சொல்லு கிருர்' என்பதைவிட்டு, சொல்லுபவர் சாதியை முதலில் கவனிப்பதால், அவர்கள் சொல்வது நம் காதுகளில் விழுவதுமில்லே.

பத்தொன்பதாம் நூற்ருண்டு தொடங்கி சமயத் துறையிலே அறிவொளி வீசலானது. பழைய வேதங்கள், ஸ்மிருதிகள், புராணங்கள் ஆகியவற்றின் மீதும் அந்த அறிவொளியைப் பரப்பினுன் காலதேவன். அந்தத் தொண்டு, தமிழகத்திலே வள்ளலாரிடமிருந்தே தொடங்குகின்றது.

"ஒருவனே தேவன்" என்றதுபோல, "ஒன்றே குலம்" என்பதனேயும் வள்ளலார் வலியுறுத்துவாராகி, "நல்ல குலம் என்றும் தீய குலம் என்றும் சொல்லள வல்லால் பொருளில்லே," யென்றும், "இருகுலமும் மாண்டிடக் காண்கிறீர்," என்றும் பாடினுர். "மனிதர் எல்லோரும் ஓர்குலம்-ஓர் இனம்" என்னும் உண்மையை வலியுறுத் தினுர். நம்மிடையே வாழும் 'பகுத்தறிவாளர்' என்போர், 'ஆரியர்' எனவும், 'திராவிடர்' எனவும் இனம் பிரித்துப் பேசி, அதையும் பண்பு வழியல்லாமல் பகை வழி நிலே நிறுத்த முயன்று, பாரத சமுதாயத்தையே

பிளவுபடுத்தி விட்டனர். அடிகளார், இந்த அறி வின்மைக்கு எதிரியாக இருந்தார். வேத ஆகமங்களை- அவற்றிற்கு மதவாதிகள் சொல்லும் வியாக்யானப்படி ஏற்க மறுத்தாராயினும், வேதியர் குலத்தையே அவர் வெறுத்தாரல்லர்; மாறுக, வேதியர்கள்பாலும் அன்பு செலுத்தி அவர் காணவிருந்த ஆன்மநேய ஒருமைப் பாட்டுரிமைச் சமுதாயத்தில் அவர்களையும் அங்கமாகக் கண்டார்.

# 5 ஆன்மநேய ஒருமைப்பாடு

அருட்பிரகாச வள்ளலார், 'ஆன்ம நேய ஒருமைப் பாட்டுரிமை' என்ற புதிய கோஷத்தை எழுப்பினர். அந்தக் கோஷத்தின் அடிப்படையில் உயிர்களிடையே சகோதர உணர்வை வளர்க்க முயன்ருர். அடிகளாரின் குறிக்கோள் பலவாயினும், அவற்றுள் தலையாயது-மற்ற எல்லாக் குறிக்கோள்களையும் தன்னுள்ளே கொண்டு விளங்குவது-ஆன்மநேய ஒருமைப்பாடு என்பதாகும். "சுத்த சன்மார்க்கத்தின் முக்கிய லட்சியம் ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமை" என்று அடிகளாரே கூறுகின்ருர்.

சன்மார்க்க நெறியிற் சாராதாரைத் 'துன்மார்க்கர்' என்றே கூறுவார் தாயுமானவர். இதனை, "சன்மார்க்க நெறியிலாத் துன்மார்க்கனேனையும் தண்ணருள் கொடுத் தாள்வையோ!" என்ற அவரது வாக்காலேயே அறியலாம். இங்குத் தாயுமானவர் வலியுறுத்துவது சித்தாந்த-வேதாந்தங்கள் கலந்த சமய சன்மார்க்கமேயாம். வள்ளலார், சமயங்கடந்த, 'சமரச சுத்த சன்மார்க்கம்' என்ற புதுநெறியையே போதித்தார்.

உயிர்கள் பலவகையான தேகங்களைப் பெற்று வாழ்கின்றன. அவற்றை, மனிதர்-மிருகம்-பறவை-ஊர்வன-நீர் வாழ்வன - தாவரம் எனப் பாகுபடுத்தியுள்ளனர் அறிஞர் பெருமக்கள். அவை அனைத்தும் பரமான்மாவால்

படைக்கப்பட்ட ஜீவான்மாக்கள் என்பது அவர் கொள்கை. அதனால், அந்த உயிர்களிடையே ஆன்ம நேய ஒருமைப்பாடு காண்பதனைத் தம் கடமையாகக் கொண்டார் வள்ளலார். "உலகம், ஆதி பகவனாகிய இறைவனை முதலாக உடைத்து" என்றார் திருவள்ளுவர். அந்த முதல் பொருளைத் தலைமையாகக் கொண்டு ஆன்ம நேய ஒருமைப்பாட்டுரிமைச் சமுதாயத்தைக் காண விரும்பினார் வள்ளலார். இதுபற்றித் தாம் இயற்றிய 'ஜீவகாருண்ய ஒழுக்கம்' என்ற நூலில் அடிகளார் தரும் விளக்கம் வருமாறு:

"சீவர்கள் எல்லாம் ஒருதன்மையாகிய கடவுள் இயற்கை உண்மை ஏகதேசங்களாகிக் கடவுள் அருட் சக்தியால் பூதகாரிய தேகங்களில் வருவிக்கப்பட்டபடி யால் இச்சீவர்களெல்லாம் ஒருரிமை இனத்தவர்களே யாகும்."

"சீவர்கள் எல்லாம் ஒரு தன்மையாகிய இயற்கை உண்மை ஏகதேசங்களாய் சர்வ சக்தியுடைய கடவுளால் சிருஷ்டிக்கப்பட்டபடியால், ஒருரிமை உள்ள சகோதரர் களே யாவர்."

மேலே எடுத்துக் காட்டிய இரண்டு பகுதிகளும் ஒரே கருத்தை வலியுறுத்துவனவாக இருப்பினும், முன்ன தில், உயிர்கள் அனைத்தையும் ஒரே இனமாகக் குறிப்பிடு கின்றார். பின்னதில், அந்த இன உரிமை பற்றிச் சகோதர ஒருமைப்பாடு இயற்கையாக இருப்பதை எடுத்துக் காட்டுகின்றார்.

"உயிர்கள் அனைத்திடமும் அன்பு செலுத்த வேண்டும்" என்பது ஜீவகாருண்யம். அடிகளார்,

அதனினும் ஒருபடி மேலே சென்று தேக பேதங்களை மறந்தவராகி, உயிர்களை எல்லாம் ஒரே இனத்தைச் சார்ந்தவையாகக் கூறுகின்றார். அது, ஆன்மநேய இன மாகும். அந்த அடிப்படையில் கருணையையே மதமாகக் கொண்ட ஒரு புத்தம் புதிய உலகை அமைக்க முயன்றார் வள்ளலார். அதனைத் தம் கண்ணாரக் கண்டு மகிழும் பேற்றினைத் தருமாறும் கடவுளைப் பிரார்த்தித்தார்.

*"உலகத்திரளெலாம் மருவறக் கலந்து*
*வாழ்வதற்கு வாய்த்ததருணம் இதுஎன்றே*
*வாயே பறையாய் அறைகின்றேன்,"*

என்னும் வரிகளில், தமது லட்சியச் சித்திரத்தைக் காட்சிப்படுத்துகின்றார் வள்ளற்பெருமான்.

அடிகளாரின் ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமை, பேதங்களைக் கடந்த அல்லது பேதங்கள் அற்ற அபேத சித்தாந்தமாகும். ஆம்; கடவுள் வேற்றுமை, வருண வேற்றுமை, சமய மத வேற்றுமை, சாதி வேற்றுமை ஆகியவற்றை எலாம் அழித்தும், மொழி, நாடு, நிற வேற்றுமைகளை எல்லாம் கடந்தும் வளர்வது ஆன்மநேய ஒருமைப்பாடு.

தெய்வம் பலப்பல சொல்லும் மூட நம்பிக்கைக்கு எதிரான சித்தாந்தம் ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமை அதனால்,

*"ஆறு கோடியாம் சமயங்கள்*
*அகத்தினும் அவைமேல்*
*வீறு சேர்ந்த சித்தாந்தவே*
*தாந்தநா தாந்தம்*
*தேறும் மற்றைய அந்தத்தும்*
*சிவம் ஒன்றே அன்றி*
*வேறு கண்டிலேன் கண்டிரேல்*
*பெரியீர்காள் விளம்பீர்!"*

எனப், பாருலகனைத்துக்கும் பறையறைந்து பாடுகின்றார் வள்ளலார். தெய்வம் ஒன்றுதான் உண்டு என்னும் உண்மையை உணராத மாந்தர்களைப் பார்த்து, ''ஒன்றெனக் காணும் உணர்ச்சி என்றுறுமோ?'' என்றும், ''ஒன்றே சிவம் என்று உணர்ந்து இவ்வுலகெலாம், நன்றே ஒருமையுற்று வாழி!'' என்றும் பாடினார். இங்கு அடிகள் 'சிவம்' என்றது உயிர்க்குலம் அனைத்துக்கும் பதியான பரம்பொருளையாகும்.

வள்ளலார் சொல்லுங் கடவுள், நாம ரூப பேதங்களுக்கு அப்பாற்பட்டது. இதனை அடிகளாரே கூறக் கேட்போம்:

''உண்மையில் 'கடவுள்' எனப்படுவது, அகிலமாம்-அன்பாம். அஃது உலகிலுள்ள எல்லாவற்றிலும் பரிபூரண சமாதானத்தையும் சமரச நிலையையும் ஏற்படுத்தி அவைகளை நிலைநிறுத்துகின்றது.''

முற்காலச் சான்றோர், 'அன்பே கடவுள்' என்றனர். அத்துடன் அகிலத்தையும் சேர்த்து, 'அன்பாம் அகிலமாம் கடவுள்' என்றார், உலக ஒருமைப்பாட்டினைக் காண விழைந்த வள்ளலார்.

உயிரினத்திடையே - குறிப்பாக, மனிதர்களிடையே ஒருமைப்பாட்டினை வளர்க்கத் தடையாக இருக்கும் எதனையும் தெய்வ சக்தியாகவோ, தெய்வ சம்மதமாகவோ ஏற்க மறுக்கிறார் வள்ளலார்.

இராமலிங்கர், உலகிலுள்ள எல்லா மதங்களையுமே வெறுத்தார். அம்மதங்களைச் சார்ந்த மக்கள்

அனைவரிடமும் ஒருமைப்பாடு காண விழைந்தார். இது அவருடைய பொதுக் கொள்கை. ஆயினும், தமது கொள்கைக்கு ஆதரவு தேடும் முயற்சியை முதலில் இந்தியாவில் தோன்றி வளர்ந்த இந்து, சமண, பௌத்த சமயங்களிடையே மட்டும் மேற்கொண்டார். இஸ்லாம்-கிறித்துவ சமயங்களைப் பற்றி அவர் வெளிப் படையாக எதுவும் சொல்லவில்லை. அதனால் இஸ்லாம், கிறித்துவ மதங்கள் அல்லாத இந்திய மதங்களை மட்டும் ஒன்றுபடுத்த விரும்பினார் என்று கருதுவதற்கில்லை. தமது கொள்கைக்கு இஸ்லாம்-கிறித்துவ மதத்தினரை ஈர்க்க விருப்பமிருப்பினும், அதனைக் காலத்தின் கையில்-கடவுள் கையில் விட்டுவிட்டார் என்றே சொல்ல வேண்டும். ஆம்; கருத்துப் போர்க்கான களத்தைப் பெரிதாக்கிக் கொள்ள விரும்பாத ராஜதந்திரி வள்ளலார்.

ஒரு குழுவினருக்கு எதிராக இன்னொரு குழுவினர் ஒன்றுபடுவது ஆன்மநேய ஒருமைப் பாட்டுரிமையாகாது. அதனைத் தற்காப்புணர்ச்சி என்றே சொல்ல வேண்டும். அடிகளார் ஒருமைப்பாட்டினை வற்புறுத்தியது குறிப்பிட்ட ஒரு குழுவினருக்கு மட்டும் தற்காப்புத் தேடவன்று, 'ஒரே உலகம்' காண்பதற்கேயாம்.

ஆதி சங்கரர், இந்து சமயத்தின் உட்பிரிவுகளாக இருந்த அறுவகைச் சமயங்களிடையே ஒருமைப்பாடு காண முயன்றார்.

ஆதி சங்கரரின் சமய ஒருமைப்பாட்டு முயற்சி, அவருடைய வெறுப்புக்கும் எதிர்ப்புக்கும் இரையான சமண, பௌத்த மதங்களுக்கு எதிராக-அந்த மதங்

களின் தாக்குதலிலிருந்து வேத மதத்திற்குத் தற்காப்புத் தேட - இந்துக்களை எல்லாம் ஒன்றுபடுத்த எடுத்துக் கொண்ட முயற்சியேயாகும். வள்ளலாரின் குறிக்கோள் அதுவன்று. அவர், மதங்களே இல்லாத மனித சமுதாய ஒருமைப்பாட்டைக் காணவே பாடுபட்டார். ஒன்று பட்ட அந்த மனித சமுதாயமும், ஒரே தெய்வநம்பிக்கை கொண்டு, பிளவு - பிரிவினை ஆகிய தீய சக்திகளிட மிருந்து விடுபட்டு, உயிர்கள் அனைத்திடமும் அன்பு செலுத்துவதாக இருக்க வேண்டுமென்றும் கனவு கண்டார். அதனாற்றான், 'இந்து நேய ஒருமைப் பாட்டுரிமை' என்றோ, 'மனித நேய ஒருமைப்பாட்டுரிமை' என்றோ சொல்லாமல், 'ஆன்மநேய ஒருமைப் பாட்டுரிமை' என்று கோஷித்தார். கோஷம் புதிதா யினும், அந்தக் கோஷத்தினுள்ளே அடங்கியிருக்கும் குறிக்கோள் உலகத்திற்குப் புதிதன்று.

# 6 எம்மதமும் சம்மதம்

உலகில், மதாச்சாரியர்களாக-தீர்க்கதரிசிகளாகக் கருதப்படுவோர் அனைவருமே உலகம் முழுவதையும் ஒரே நெறியின் கீழ்க் கொண்டு வர முயன்றவரேயாவர். ஆனால், காலம் அவர்களுள் ஒவ்வொருவரைத் தனிமைப் படுத்திப் பல மதங்களை ஏற்படுத்தி விட்டது. அதனால், ஒவ்வொரு நெறியும் அல்லது ஒவ்வொரு இயக்கமும் காலகதியில் தனித் தனி மதங்களாகி, அவற்றைத் தோற்றுவித்தவர்களின் ஒரே உலகக் கனவு பலிக்காமல் செய்து விட்டது.

மதவாதிகளும் ஞானிகளுமே யன்றி, சக்கரவர்த்தி களும் உலகனைத்தையும் ஒரு குடைக்கீழ்க் கொண்டுவர முயன்று, அதிலே அவர்கள் தோல்வியடைந்தனர். அதன் விளைவாக, சாம்ராஜ்யங்கள் பலவாயின. உலக சாம்ராஜ்யம் காணச் சக்கரவர்த்திகளுள் சிலர் முயன்ற தற்குத் தலைமைப் பதவியில் அவர்கள் கொண்டிருந்த ஆசையும் ஒரு காரணமாக இருக்கலாம். ஆயினும், ஒரே உலகப் பொதுமை உணர்வும் அவர்களுக்கு இருந்ததென்பதை நாம் மறப்பதற்கில்லை.

ஞானியர்களும் அரசர்களும் அடைந்த தோல்வி களுக்குக் காரணம், அவர்களது 'ஒரே உலக' முயற்சி யானது, ஆன்மநேய ஒருமைப்பாட்டுணர்வை அடிப் படையாகக் கொள்ளாததுதான்.

ஒரே உலக உணர்வுடன் தோன்றிய மதங்கள் தங்களுக்குள்ளே போட்டியிட்டு, போராடத் தொடங்கி, தத்தம் உயிர்க் கொள்கையான உலக ஒருமைப்பாட்டிற்கே கேடிழைத்துவிட்டன. அந்தப் புனிதமான குறிக்கோள் என்றென்றுமே நிறைவேருதபடி மதங்கள் தடைகளாகி விட்டன. அதனுற்ருன், மதங்களை அழித்தாலன்றி, ஆன்ம நேய ஒருமைப்பாடு தோன்றுவதோ, உலகிலுள்ள மனிதர் அனைவரும் ஒரு குலமாய் ஒன்றுபடுவதோ சாத்தியமில்லை என்ருர் சமரச சுத்த சன்மார்க்க சங்கத் தலைவரான வள்ளலார்.

மதங்கள் பலவாயிருப்பினும், குறிக்கோளில் ஒருமைப்பாடு இருப்பின், வள்ளலார் மதங்களை வெறுத்திருக்க மாட்டார். ஆனுல், அவர் வாழ்ந்த காலத்தில், "போதித்த சமயமோ ஒன்று சொன்னபடி ஒன்று பேசாது" என்று தாயுமானவர் எடுத்துக் காட்டிய இழிதன்மையே நிலைத்திருந்தது. அதனுல் மதங்களை யொழித்து, மனித குலத்திடையே ஒற்றுமை காண விழைந்தார்.

'எம்மதமும் சம்மதம்' என்பது அடிகளாரின் கொள்கை. இதனை,

*"எம்மத நிலையு நின்னருள் நிலையில் இலங்குதல்*
*அறிந்தனன்*
*எல்லாஞ் சம்மத மாக்கிக் கொள்கின்றேன்"*

என்ற அருட்பா வரிகளில் வெளிப்படுத்துகின்ருர். இங்கு 'எம்மதம்' என்று அடிகளார் குறிப்பது, மத ஸ்தாபனங்களை யன்று; மத தத்துவங்களையே. இந்தக் குறிக்கோளுக் கிணங்க-சித்தாந்தம், வேதாந்தம், நாதாந்தம்

கலாந்தம்,யோகாந்தம், போதாந்தம் ஆகிய ஆறு அந்தங்களையும் ஒன்றுபடுத்தி, "ஷடாந்தம்" என்ருெரு சமரச சமஷ்டித் தத்துவத்தை உருவாக்கினுர்.

ஆதிசங்கரர், இந்து மதத்தின் உட்பிரிவுகளான ஆக்னேயம், ஐந்திரம், கணுதிபத்தியம், சைவம், வைணவம், சாக்தம் ஆகிய ஆறு சமயங்களையும் ஒன்று படுத்தினுர்; அது காரணமாக, 'ஷட்மத ஸ்தாபகர்' என்ற சிறப்புப் பெயர் பெற்ருர். அவர்காலத்தில் இந்து மத மொன்றே இந்தியா முழுவதிலும் செல்வாக்குப் பெற்றிருந்ததால், அதன் உட்பிரிவுகளை ஒன்றுபடுத்து வதையே தேசிய ஒருமைப்பாட்டுப் பணியாக அவர் கருதியிருக்கக் கூடும்.

அவருக்குப் பல நூற்ருண்டுக்குப் பின் வாழ்ந்த வள்ளலார் காலத்தில், இஸ்லாம்-கிறித்துவ மதங்கள் இந்து மதத்தின் செல்வாக்கை ஊடுருவி, அந்த மதங்களைச் சார்ந்தவர்களால் நடத்தப்பட்ட அரசாங்கங்களின் துணையால், இந்தியாவில் நிலைத்து விட்டன ஆகவே, இந்து மதத்திற்குப் புறச் சமயங்களானசமண-பௌத்த மதங்களையே யன்றி, இந்தியாவிற்கே புறச் சமயங்களான இஸ்லாம்-கிறித்துவ மதங்களையும் ஒன்று படுத்தி, உலக ஒருமைப்பாடு காண விழைந்தார்.

அடிகள், தமது ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமைக் கொள்கையை முதலில் இந்திய மதங்களிடையே மட்டும் பரப்ப முயன்றதற்கு முக்கிய காரணம், அந்தக் கொள்கைக்கு மிகவும் நெருக்கமாக இருக்கும் நாடு இந்தியா தான் என்று அவர் நம்பியதேயாகும். இதனை சுவாமி விவேகானந்தரும் உறுதிப்படுத்துகின்ருர்.

"எல்லா தேசங்களிலும் 'எல்லா மனிதர்களையும் தன்னுயிர் போல் நினை' என்ற உண்மை சொல்லப்பட்டிருக்கிறது. நாம் மனித உயிர்களுக்கும் மற்ற உயிர்களுக்கு வித்தியாசம் காட்டுவதில்லை."

"ஏன் மற்ற உயிர்களைத் தம் உயிர்போல் நினைத்து அன்பு செய்ய வேண்டும்? இதற்குக் காரணம் மற்ற சாஸ்திரங்களில் கொடுக்கப்படவில்லை. அதற்குக் காரணம் இங்குதான் இருக்கிறது. கடவுள் அருபமாய் எல்லா உயிர்களிலும் இருக்கிறார். அதனால், எல்லா உயிர்களும் சமம்."

ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமைச் சித்தாந்தம், 'தெய்வம்ஒன்று' என வற்புறுத்துவதோடு, 'அத் தெய்வம் எல்லா உயிர்களிலும் இருக்கிறார்' என்றும் சொல்கின்றது.

மனிதர், மிருகம், பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம்என்பன வெல்லாம் உடலைக் காரணமாகக் கொண்ட வேற்றுமைகளே. அந்த வேற்றுமைகளுக்கும் ஆன்மாவுக்கும் சம்பந்தமில்லை என்பது அடிகளின் கொள்கை.

உயிர்கள் அனைத்திலும் கடவுள் வியாபித்திருக்கிறார் என்ற உண்மையை உணராதவர், தம்மிடத்திலுள்ள கடவுள் தன்மையையும் உணரத் திறனற்றவராவர். இதனை,

"ஜீவகாருண்யம் ஆன்மாக்களின் இயற்கை விளக்கம் ஆதலால், அந்த இயற்கை விளக்கமில்லாத ஜீவர்களுக்குக் கடவுள் விளக்கம் அகத்திலும் புறத்திலும் வெளிப்படவேமாட்டா"

என்ற அடிகளார் வாக்காலும் அறிகிறோம்.

# 7 சன்மார்க்க அரசியல்

ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமை உலகில் நாட்டுப் பற்றுக்கு இடமுண்டா? இந்த வினவுக்கு 'உண்டு' என்றே விடை தருகின்ருர் வள்ளலார். ஆனல் அதற் கொரு நிபந்தனே விதிக்கின்ருர். உலக ஒருமைப் பாட்டிற்குத் தடையாக நாட்டுப்பற்று அமையக்கூடா தென்பதே அந்த நிபந்தனே.

"அகிலமாம் சகோதரத்துவத்தின் மூலக்கருத்தின் சாரத்தை ஒத்துக்கொண்டு இந்தியாவில் 'சகோதர அறம்' நிலேநாட்டப்பெறல் வேண்டும்" என்று சித்தி வளாகத்தில் உபதேசித்திருக்கிருர். இந்த வாசகத்தால் இந்திய தேசிய ஒருமைப்பாட்டினே அடிகள் ஏற்றுக் கொண்டது தெளிவாகும். 'சகோதர அறம்' என்று வடலூர் முனிவர் கூறியதையே, 'தேசிய ஒருமைப்பாடு' என்ற வாசகத்தில் வார்தா முனிவரும் வலியுறுத்தினர். இந்தியர் ஒன்றுபடும் நிகழ்ச்சியை 'அறம்' என்றதால், அந்த ஒற்றுமைக்கு எதிரான பிரிவினே 'பாவம்' என்பது புலனுகும்.

உலக ஒருமைப்பாடு எப்படி, எப்போது, எந்த வகையில் அமைய வேண்டும் என்ற விவரங்களே அடிகளார் கூறவில்லே. அந்தப் பொறுப்பைத் தமக்குப் பின்வரும் உலகத் தலேவர்கள் நிறைவேற்றுவார்கள்

என்று நம்பினர் போலும்! அதனுற்ருன், "அகிலமாம் சகோதரத்துவத்தின் மூலக்கருத்தின் சாரத்தை ஒத்துக் கொள்ள வேண்டும்" என்று இந்திய தேசிய வாதி களுக்கு அடிகள் அறிவுரை கூறினர்.

இந்தியா பல்வேறு இனங்களை அல்லது இனவழி நாடுகளைக் கொண்ட ஒரு உபகண்டம் என்ற உண்மையை அடிகளாரும் உணர்ந்திருக்க வேண்டும். அதனுற்ருன் "இந்தியாவில் சகோதர அறம் நிலை நாட்டப் பெறல் வேண்டும்" என்று கூறினர். அதாவது, பன்மையிலே ஒருமை காண்பதே சகோதர அறமாகும்.

அடிகளார் இந்தியாவை ஒரே நாடாகக் கருதி இருப்பது இன்றைய தலைமுறையினரின் கவனத்திற் குரியதாகும். ஆம்; ஆன்ம நேய ஒருமைப்பாட்டுலகில் எந்த ஒரு நாடும், எந்த ஒரு இனமும் தனித்து வாழ்வது சாத்தியமில்லை. இதுவே, சுத்த சன்மார்க்கத்தின் அரசியல் சித்தாந்தம். இதனை மறுப்போர், வெறுப் போர், வேங்கடத்திற்கோ அல்லது விந்தியத்திற்கோ வேலி போட விரும்புவோர், இராமலிங்கரைப் பின்பற்று வோராக மாட்டார். உரிமையும் ஒருமையும் பிணைந்த ஒன்றே அடிகளார் விரும்பிய உலக அரசியல்.

வள்ளலார், தம்மளவில் அருளாளராக மட்டுமே வாழ விரும்பினர். அதற்கப்பால், உலகியலிலோ, உலக அரசியலிலோ ஈடுபட்டுப் புகழ்தேட அவர் விரும்பின ரல்லர். இதனை "உலகெலாம் பெரியவர் பெரியவர் எனவே சிறக்கவும் ஆசை இல்லை" என்ற வரிகளில் பிள்ளைச் சிறு விண்ணப்பத்தில்-அடிகளாரே கூறுகின்ருர்.

''இவ்வுல கதிலே இறை அர சாட்சி
இன்பத்தும் மற்றைஇன் பத்தும்
எவ்வள வெனினும் இச்சைஒன் றறியேன்
எண்ணுதோ றருவருக் கின்றேன்''

என்ற வரிகளில், அரசியலில் ஈடுபடுவதால் வரும் புகழின்பத்தைத் தாம் விரும்பவில்லை என்பதோடு, அதனை எண்ணும்போது தமக்கு வெறுப்பேற்படுவதாகவும் புகலுகின்றார். ஆயினும், உலக மக்கள்பால் கொண்ட அன்புள்ளம் காரணமாக, அரசியலிலிருந்து துன்மார்க்கர்களை வெளியேற்றி, சன்மார்க்கர் அரசினை அமைக்க அடிகள் ஆவல் கொண்டார்.

''கருணைஇலா ஆட்சி கடுகி ஒழிக
அருள்நயந்த நன்மார்க்கர் ஆள்க-தெருள்நயந்த
நல்லோர் நினைத்த நலம்பெறுக நன்றுநினைத்து
எல்லோரும் வாழ்க இசைந்து''

என்ற பாடலில் தாம் கொண்டுள்ள அரசியல் குறிக்கோளை நமக்கு அறிமுகப்படுத்துகின்றார். கருணையின்றி, போர் வெறி கொண்டு, மக்களைக் கொலை புரியும் அரக்கர் ஆட்சி ஒழிய வேண்டுமென்பது அடிகளின் கொள்கை.

எதிலும் நடுவு நிலைமை வேண்டும். அரசியலுக்கோ அது மிக மிகத்தேவை. அடிகளார் வாழ்ந்த காலத்திலும் அரசாள்வோர் நடுவு நிலைமையின்றி, தன்னலத்தால் உலகெங்கும் கெடு நிலையைத் தோற்றுவித்தனர். அத்தகைய கொடுங்கோலரைக் கண்டபோதெல்லாம் நெஞ்சங் குமுறினர் அன்புருவான நம் வள்ளலார்.

இன்றைய உலகில் நடுவு நிலைமை அரசியல் நல்லறிவாளர்களால் போற்றப்படுகின்றது; நன்னெறியில் செல்லும் நாடுகளால் - அரசுகளால் பலவிதமான சோதனைகளுக்கிடையேயும் கடைப்பிடிக்கப்படுகின்றது. இந்த ஒழுக்க நெறியை அரசியலார் கடைப்பிடிக்க வேண்டுமென ஒரு நூற்றாண்டுக்கு முன்பே அடிகளார் கூறினார். இந்த உணர்வு அடிகள் கொண்டிருந்த ஆன்ம நேய ஒருமைப்பாட்டுரிமைக் கொள்கையின் விளைவாகும். குறுகிய மதப் பற்றை அவர் வெறுத்ததுபோல், குறுகிய நாட்டுப் பற்றையும் வெறுத்தொதுக்கினார். ஆம்; அரசியலில் அவர் சர்வ தேசீயவாதி!

ஒன்றை ஒழிக்க முயலுங்கால், அதன் இடத்தில், அதை விட நல்லதான இன்னொன்றை அமர்த்தவும் முயல வேண்டும். அரசியலில் இந்த ஆக்க உணர்வு மிகமிக அவசியமாகும். ஆக்கத் திறனின்றி அழிப்பதற்கு மட்டும் முயல்வோர் சன்மார்க்கராகார்.

சன்மார்க்கராகிய அடிகள் "கருணையிலா ஆட்சி கடுகி ஒழிக!" என்று கோஷித்தார். அடுத்த மூச்சிலேயே, "அருள் நயந்த நன்மார்க்கர் ஆள்க!" என்றும் கூறினார். அடிகளின் இந்தப் பொன்மொழி அரசியல்வாதிகளுக்கு அவர் தந்த புனித மொழியாகும்.

"பசியாலும் பிணியாலும் பகையாலும் குடி மக்களுக்குத் தோன்றும் அச்சம் தொலைத்து, அவர்களை அருள் நெறியிற் செலுத்துகின்ற நல்லரசு தோன்றுக என்று "எங்கும் எதிலும் என்றென்றும் நீதிக்கொடி வானளாவப் பறப்பதாக" என்றும் பாடுகின்றார்.

இராமலிங்கர், உலக இன்பங்கள் அனைத்தையும் துறந்து, வெள்ளை வேட்டித் துறவியாக வாழ்ந்தாரா யினும், உயிர்களுக்குத் தொண்டு செய்யும் நோக்குடன் உலகியலிலும் தொடர்பு கொண்டிருந்தார். அத்தகைய உலகியலுணர்வை ஆண்டவனே தமக்கு அளித்தான் என்கிறார். இதனை, "உலகியலோடு அருளியலும் ஒருங் கறியச் சிறியேன் உணர்விலிருந்து உணர்த்தினன்," என்ற வரிகள் உணர்த்தும். "ஈதலால்வேறோர் தீது என திடத்தே இல்லை" என்று பெருமான் கூறுவதால், உலகி யலில் ஈடுபட நேர்ந்ததனைத் தவிர்க்க முடியாத ஒரு தீமையாகவே அவர் கருதியது புலனாகும்.

# 8 அருளாட்சி

சுத்த சன்மார்க்கப் பேரியக்கங் கண்ட பெருமான், அருளாட்சி செலுத்தும் திறனைப் பெற்றிருந்தார். ஆம்; அவர், அரசாட்சியை வெறுத்தொதுக்கினர்; அருளாட்சியை விரும்பிப் பெற்றூர். ஆண்டவன் அவரை அருட்சோதிப் பேரரசின் தலைவராக்கினர்.

பல்வேறு கண்டங்களைக் கொண்ட உலக முழுவதையுமேயன்றி, அண்டங்களையும் பிண்டங்களையும் தன்னுள் அடக்கிய பிரபஞ்சம் முழுவதிலும் தாம் அருளாட்சி செலுத்துவதாகக் கூறுகின்றூர். ஆம்; உயிர்களையெலாம் குடிகளாகக் கொண்டு, அன்பென்னும் அரியாசனத்தமர்ந்து அறத்தை முடியாகப் புனைந்து, 'சமரசம்' என்னும் செங்கோல் பிடித்து, தெய்வத்தின் பிரதிநிதியாக சன்மார்க்கப் பேரரசு செலுத்துகின்றூர் அடிகளார்.

ஒரு மனிதன், இன்னொரு மனிதனின் உயிரைப் போக்கினல், அதன் பெயர் கொலை! அந்தக் கொலைஞனை நீதிமன்றம் தண்டிக்கும். ஆனல், ஒரு நாட்டினர் இன்னொரு நாட்டின் பேரில் படையெடுத்து, அந்த நாட்டினரைக்கொன்று குவித்தால், அதன் பெயர் போர்! அந்தப் போரில் வென்றவனைப் புகழ்ந்தும்,

வீழ்ந்தவனை இகழ்ந்தும் 'பரணி' பாடுவர் கவிஞர்கள். இது உலகாள்வோர் கண்ட 'நியதி-நீதி!'

நம் அடிகளார், அரசியல் போரில் நிகழும் உயிர்ச் சேதங்களையும் 'கொலை' என்றே குறிக்கின்றார். போர் வெறியை அறவே ஒழித்த புதுஉலகமே நம் அடிகளார் விரும்பிய ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமையுலகம். இதனை மறத்தல் கூடாது.

இருபதாம் நூற்றாண்டில் மாபெரும் விடுதலைப் புரட்சிக்குத் தலைமை தாங்கிய காந்தியடிகள், வள்ளலாரின் அரசியல் நெறிக்கு வாரிசாக விளங்கினர். ஆண்டவன் ஒருவனே அரசன்; அவனுடைய அருளாட்சியே உலகம் முழுவதும் நடைபெற வேண்டும் என்பது காந்தியடிகளின் விருப்பம். "கருணையிலா ஆட்சி கடுகி ஒழிக," என்ற அடிகளாரின் கோஷத்தையே, "வெள்ளையனே வெளியேறு," என்று 1942ல் காந்தியடிகளும் கோஷித்தார். உலகம் முழுவதும் நல்லாட்சி அமைய வேண்டும். சகலருக்கும் நல்வாழ்வு தரும் சமதரும ஆட்சி தோன்ற வேண்டும் என்ற பரந்த நோக்கங் கொண்டு, அதற்கு ஒத்திகையாகப் பாரத நாட்டின் விடுதலைக் கிளர்ச்சியை நடத்தினர் காந்தியடிகள்.

வெள்ளாடைத் துறவியாக விளங்கிய இராமலிங்கரைப் போலவே அவர் காலத்திலேயே தோன்றி-அவருக்குப் பிறகும் உலகப் புகழுடன் விளங்கிய சுவாமி விவேகானந்தரும் நானிலமெங்கும் நல்லாட்சி காண விழைந்தார். வள்ளலார், "இந்தியாவில் சகோதர அறம் நிலை நாட்டப் பெறல் வேண்டும்" என்றாரே, அதனை நிறைவேற்ற அரும் பாடுபட்டார் விவேகானந்தர்.

"பரம சந்நியாசியைத் தவிர மற்றவர்கள் அனைவரும் நாட்டுப் பற்றில்லாதவர்களாயின் பிணங்களுக்குச் சமமானவர்கள்" என்பது விவேகானந்தரின் பொன்மொழி. இராமகிருஷ்ண பரமஹம்ஸர் பரம சந்நியாசியாக இருந்தாராதலால், அவர் நாட்டுப் பற்றைச் சுட்டெரித்தார். இராமலிங்கர் நாட்டுப் பற்றைத் தொட்டும் தொடாமலும் உயிர்களுக்குத் தொண்டு புரிந்தார். விவேகானந்தர் நிலையும் அதுவே. ஆனால், சமயம் வாய்த்தபோது, அந்தப் பற்றைக் களைந்தெறிந்து, பரம சந்நியாசிகளாகக் காட்சியளித்தனர் இராமலிங்கரும் விவேகானந்தரும். இது உலகறிந்த உண்மை.

இந்த இரு பெரியார்களுக்குப் பின் பொதுவாழ்வில் புகுந்த அருளாளரும் அரசியல் தலைவருமாகிய காந்தியடிகள், தாம் அரசியலில் தொடர்பு கொண்டிருந்தது பற்றிக் கூறியதாவது:

"என்னைப் பொறுத்தமட்டில் முத்திக்கு நான் கண்ட வழி நாட்டுக்கு உழைத்து வருவதே யாகும். இடையறாத உழைப்பை நாட்டுக்குச் செலுத்தி அதன் வாயிலாக உலகத்துக்குப் பணியாற்றுவதே நான் கண்ட முத்தி மார்க்கம். உலகத்திலுள்ள உயிர்களோடு ஒன்றுபட்டுப் போவதே என் ஆசை."

இந்த வாசகத்தில் "ஞானியர்களுடைய அரசியல், உலகிலுள்ள உயிர்களோடு ஒன்றுபட்டு, அவற்றின் நலன் கருதித் தொண்டாற்றுவதே" என்கிறார் காந்தியடிகள்.

"அரசியலில் ஈடுபடாமல் அதிக ஊழியம் எதுவும் செய்ய முடியாதென்று கண்டதனாலேயே நான் அரசி

யலில் ஈடுபட வேண்டிய அவசிய மேற்பட்டது. அரசியல் வேலைகளைச் சமூக முன்னேற்றத்துடனும் சன்மார்க்க முன்னேற்றத்துடனும் சேர்த்தே நாம் கவனிக்க வேண்டும். ஜனநாயக ஆட்சி சம்பந்தமில்லாத எந்த விஷயமும் கிடையாது'' என்பது காந்தியடிகளின் கொள்கை. வள்ளலார் ''அருள் நிறைந்த சன்மார்க்கர் அரசியல் நடத்த வேண்டும்'' என்ருர். வார்தா முனிவரும், ''அரசியல் வேலைகள் சன்மார்க்க நெறியைத் தழுவியதாகவே இருக்க வேண்டும்'' என்கிருர். தம்முடைய ''சுயசரிதை''யில், மேலும்,

''கடவுள் வழிபாட்டுக்கும் அரசியலுக்கும் சம்பந்த மில்லை; அதுவேறு; இது வேறு-என்று சிலர் சொல்வார் களே, அதை நான் ஒப்புக்கொள்ளவில்லை. இதை நான் மிக அடக்கத்துடன் சொல்லுகிறேன். ஆனுல், ஐயமறச் சொல்வேன், சமய விசாரத்துக்கும் அரசியலுக்கும் சம்பந்தமில்லையென்று சொல்லுவது முற்றிலும் தவறு. கடவுள் விஷயம் சரியாக அறியாதவர்கள்தான் அப்படி வேறுபடுத்துவார்கள்'' என்று கூறுகின்ருர்.

ஞானியர்களின் சமூகத்தொண்டு அல்லது அரசியல் பணி, ''பாடுபடு; பலனைத் துறந்துவிடு'' என்ற தருமத்தைத அடிப்படையாகக் கொண்டதாகும். நம் வள்ளலாரும் அதையே வலியுறுத்தினுர்; அதன்படி வாழ்ந்தும் காட்டினுர்.

நம் காலத்தில் வாழ்ந்த காந்தியடிகள், மாபெரும் பாரத தேசம் விடுதலை பெறப் போராடி, வெற்றியும் பெற்ருர். ஆனுல், விடுதலை பெற்ற பாரதத்தின் ஆட்சி பீடத்தில் அமர்ந்து, அதிகாரம் செலுத்த அவர்

விரும்பினரல்லர். சுதந்தர இந்தியாவிலும் அதிகார அரசியலுக்குப் புறம்பாக இருந்தே மக்களுக்குத் தொண்டாற்றினர்.

தாம் கண்ட ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமை உலகின் ஆட்சி எத்தகையதென்பதை விளக்க மனுநீதிச் சோழனைச் சான்று காட்டினர் வள்ளலார். அம் மாமன்னன், வாய் பேசாச் சீவனுகிய பசுவுக்கும் நீதி வழங்கியதை நினைப்பூட்டினர். ஆம்; கன்றை இழந்த பசுவின் துயர் துடைக்கத் தன் மைந்தனைத் தேர்க்காலில் இட்ட மனுநீதிச் சோழன், தழுவக் கொம்பில்லாது தவித்த முல்லைக் கொடிக்குத் தேரீந்த வள்ளல் பாரி, குளிரால் நடுங்குவதாக நினைத்துத் தன் போர்வையை மயிலுக்குத் தந்த பேகன்-ஆகிய மன்னர் பெருமக்கள் ஆன்மநேய ஒருமைப்பாட்டு வழி நின்று அரசாண்டோராவர்.

வள்ளலார் கண்ட சமரச சுத்த சன்மார்க்கப் பேரரசு ஈ, எறும்பு, புழு ஆகிய 'இழிந்த' உயிர்களுக்கும் நீதி வழங்கும் நெறியுடையதாகும். ஆம்; வள்ளலாருடைய ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமை அரசியலுக்கு முழு அளவில் பொருந்தக்கூடிய ஒரே மன்னன் மனுநீதிச் சோழன்தான்.

" எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரும்
தம்முயிர்போல் எண்ணி உள்ளே
ஒத்துரிமை உடையவராய் உவக்கின்றார்
யாவர் அவர் உளந்தான் சுத்த
சித்துருவாய் எம்பெருமான் நடம்புரியும்
இடமெனநான் தெரிந்தேன் அந்த
வித்தகர்தம் அடிக்கேவல் புரிந்திடஎன்
சிந்தைமிக விழைந்த தாலோ "

இந்தப்பாடல், வள்ளலார் வழிபட விரும்பிய பூரண ஞானிக்குரிய இலக்கணத்தைக் கூறுகின்றது. இந்திய தேசிய ஒருமைப்பாடானாலும் சரி, வள்ளலார் விரும்பிய ஆன்மநேய ஒருமைப் பாடானாலும் சரி, எள்ளளவும் பேதமின்றி உள்ளத்தால் அதனை விரும்ப வேண்டும். அனைத்துயிரையும் தம்முயிர்போலக் கருத வேண்டும். ஆம்; ஒருமைப்பாட்டுணர்வு உள்ளத்தில் பிறந்து, உதட்டிலே ஒலிக்க வேண்டும்.

அடிகளார் புலால் உணவினை வெறுத்துச் சைவ உணவினை வலியுறுத்தினர் என்றால், அது வெறும் உணவுப் பிரச்னையன்று; உயிர்க் குலத்தின் ஒருமைப் பாட்டுப் பிரச்னை; ஆன்மநேய ஒருமைப்பாட்டுடைய புது உலகம் காணும் புனிதப் பிரச்னை. இதனை மறத்தல் கூடாது. இராமலிங்கர், புலாலுணவை மறுத்துச் சைவ உணவினை வற்புறுத்தியதற்கான காரணங்களை, "ஜீவ காருண்ய ஒழுக்கம்" என்னும் தமது அறிக்கையுள் விரிவாகக் கூறுகின்றார். உயிர்கள்பால் இரக்கம் காட்டும் உணர்வு தோன்றினாலன்றி, மனிதகுலத்தவரிடையே ஒற்றுமை ஏற்படுவதோ இந்தியரிடையே தேசிய ஒருமைப்பாடு தோன்றுவதோ சாத்தியமில்லையென்று கருதினார் அடிகள்.

ஆம்; மனிதனை மனிதன் சுரண்டுவதும், ஒரு நாட்டினரை இன்னொரு நாட்டினர் அடிமைப்படுத்துவதும், ஒரு சாதியினரை அடிமைப்படுத்திப் பிறிதொரு சாதியினர் ஆதிக்கம் செலுத்துவதும், ஒரு மதத்தினரை மற்றொரு மதத்தினர் பகைப்பதும் உயிர்களனைத்தும் பரம்பொருளின் வடிவங்கள் என்ற உண்மையை உணராமலிருப்பதன் விளைவுகளே என்று அடிகள் நம்பினார்.

அதனுல் ஜீவகாருண்ய ஒழுக்கத்தை அடிப்படையாக வைத்து, ஆன்மநேய ஒருமைப்பாட்டினை வளர்க்க முயன்றுர்.

வள்ளற்பெருமான் ஜீவகாருண்ய ஒழுக்கத்தினைக் கடைப்பிடிப்போர், தீயோரிடமும் தயையுடையவர் களாக ஒழுக வேண்டும் என்று போதித்தார். தீயோரை நல்வழிப்படுத்தும் மார்க்கத்தைக் கூறுமிடத்து,

"என்னிடத்தில் ஒருவன் வசப்படாத முரட்டுத்தன மாய் எப்படியிருந்தாலும்,

(1) அவனுக்கு நல்லவார்த்தை சொல்லுவேன்,
(2) மிரட்டிச் சொல்வேன்,
(3) தெண்டன் விழுந்து சொல்லுவேன்,
(4) பொருளைக்கொடுத்து வசப்படுத்துவேன்.
(5) அல்லது ஆண்டவரை நினைத்துப் பிரார்த்தனை செய்வேன்.

இப்படி எந்த விதத்திலேயாவது நல்ல வழிக்கு வரச் செய்துவிடுவேன். நீங்கள் எல்லவரும் இப்படியே செய்தல் வேண்டும்" என்று தம் சீடர்களுக்கு உபதே சித்தார். ஆம்; துன்மார்க்கரையும் வசப்படுத்த சன்மார்க்கரால் முடியும் என்பது அடிகளாரின் நம்பிக்கை.

# 9 வடலூர் முனிவரும் வார்தா முனிவரும்

வள்ளலார் பரம்பொருளால் படைக்கப்பட்ட பிர பஞ்சம் முழுவதையுமே தாயகமாகக் கொண்டவர். ஆகவே, இவர் இத்தமிழகத்தே கடைவிரித்து, "ஆன்ம நேய ஒருமைப்பாட்டு உரிமைச்" சரக்கினை விற்க முயன்ருர். சரக்கு விலை போகாததால், இங்குக் கடையைக் கட்டிக்கொண்டு, வடக்கே சென்று தமது வாணிபத்தைத் தொடர்ந்தார் என்று நம்பலாம்.

"நான் கொடுத்த போதனைகளை, இந்துக்கள் செவி யுற்றுக் கேளாதபோதிலும், வேதாகமங்களில் அமிழ்ந்து கிடக்கும் அந்தரங்கக் கருத்துக்களைப் பத்திரமாய் வைத்திருக்கும் **மகாத்மாக்கள்** அந்நிய நாட்டாருக்கு வெளிப்படுத்துவார்கள். அந்நிய நாட்டார் அவற்றைச் சந்தோஷத்துடன் ஏற்றுக்கொள்வார்கள்" என்று வள்ளற்பெருமான் கூறியதாகத் தொழுவூரார் என்னும் அடியார் தகவல் தந்துள்ளார்.

வள்ளலார் புகன்றபடி, அவரது மறைவுக்குப்பின் வடபாரதத்தில் ஒரு மகாத்மா நமக்கு அறிமுகமானுர். அவர்தான், **மோகன்தாஸ் கரம்சந்திர காந்தியாவார்.**

இராமலிங்கர் நாட்டிலே நல்லாட்சி அமைய வேண்டுமென்பதில் அக்கறை கொண்டிருந்தாராயினும்,

ஆத்மார்த்தத் துறையிலேயே அவர் அதிகக் கவனம் செலுத்தினர். காந்தியடிகளும் ஆத்மார்த்தத் துறையில் அக்கறை கொண்டிருந்தாராயினும் அரசியல் துறையிலேயே அதிக ஆர்வம் காட்டினர்.

இந்த முரண்பாடற்ற வேற்றுமைக்குக் காரணம், இரு பெரியார்களும் வாழ்ந்த காலத்தில் நாட்டின் சூழ்நிலையிலிருந்த வேறுபாடுதான். வள்ளலார், "கருணையிலா ஆட்சி கடுகி ஒழிக" எனக்கூறி, "அருள் நயந்த நன்மார்க்கர் ஆள்க" எனப் பாடினர். அதனையே "ராமராஜ்யம்" என்ருர் காந்தியடிகள். இது தவிர, இன்னும் எத்தனையோ துறைகளில் வள்ளலாரே காந்தியாக வந்தாரோ என்று ஐயுறுமளவுக்கு அவர்களிடையே கருத்தொருமை இருக்கக் காண்கிருேம். இராமலிங்கர்,

சாதி வேற்றுமைகள் அடியோடு தொலைய வேண்டும்;

மதங்கள் அனைத்துமே தொலைந்து மதங்கள் அற்ற மனித சமுதாயம் அமைய வேண்டும்;

உயிர்கள் அனைத்தையும் சமமாகக் கருதி அவற்றின் பால் அன்பு செலுத்த வேண்டும்;

பட்டினி தொலைந்து பாரிலுள்ள அனைவோரும் பசியார உண்ண வேண்டும் என்னும் சீரிய கொள்கைகளை எல்லாம் செந்தமிழ் நாட்டு மக்களிடையே பரப்பப் பாடினர்; பாடுபட்டார்.

இந்தக் கொள்கைகள் அனைத்தும் காந்தியடிகளாலும் வலியுறுத்தப்பட்டன. ஒரு விஷயத்தில் மட்டும் வள்ளலாரிடமிருந்து காந்தியடிகள் சிறிது வேறு

பட்டார். அதாவது, மதங்களற்ற மனித சமுதாயம் காணவிரும்பினர் வள்ளலார். காந்தியடிகள், மதங்களை அழிக்காமல் அவற்றிடையே ஒருமைப்பாடு காண முனைந்தார். இதனை முரண்பாடுடைய பெரிய வேற்றுமையாகக் கொள்ளத் தேவையில்லை.

மதங்களிடையே உறவு ஏற்பட்டு, பரஸ்பர நல்லெண்ணம் நிலவி, அவற்றிடையே ஒருமைப்பாடு நிலவுவது சாத்தியமானல், அதனை, அருட்பிரகாசருடைய திருவுள்ளத்திற்கு இசைந்ததாகவே கொள்ளலாம். அப்படியே இன்று அடைந்துள்ள இழிநிலையிலிருந்து மதங்களை மீட்க முடியாதென்ருல் அவற்றை அடியோடு மறைத்து ஒழிப்பது காந்தியத்திற்கும் பொருந்துமெனக் கொள்ளலாம்.

வள்ளலார் புரட்சிகரமான புதிய கொள்கைகளை மக்களிடையே பரப்பினர். அதற்குமேல் செயலில் ஈடுபட்டுத் தம் கொள்கைகளுக்கு வெற்றிதேட அவருக்கு வாய்ப்பில்லை. அதற்கான முக்கிய காரணம், தம்முடைய ஆன்மாவுக்கு மரணமிலாப் பெருவாழ்வு தேடும் முயற்சியிலும் அவர் ஈடுபட்டதுதான்.

காந்தியடிகள் அரசியலிலேயே முழு மூச்சுடன் ஈடுபட்டாராதலால், சமுதாயத்தில் புரட்சிகரமான மாறுதல்களை ஏற்படுத்த அவரால் முடிந்தது. இன்று பாரதத்தில், சமயச் சார்பற்ற அரசு முறை அமுல் நடக்கிறது;

தீண்டாமைக் கொடுமை சட்ட ரீதியாக ஒழிக்கப் பட்டிருக்கின்றது;

சொத்துரிமைகளிலும் பிற சமூக உரிமைகளிலும் ஆணுக்குப் பெண் சமம் என்ற அறம் நிலை நாட்டப் பெற்றிருக்கிறது;

உடைமையாளர் உண்டு மகிழவும், வறுமையாளர் உணவின்றித் தவிக்கவுமான இழிநிலை அகல "சோஷலிஸச் சமுதாயம்" அமைக்கப்படுமென்று உறுதி கூறப் பட்டுள்ளது;

தமிழகத்தில், தெய்வத்தின் பெயரால் உயிர்ப்பலி கொடுக்கும் மூட நம்பிக்கை சட்ட விரோதமாக்கப்பட்டு இருக்கிறது;

மது உண்ணும் கொடிய வழக்கத்தை ஒழிப்பதற்காகச் சட்டப் பூர்வமான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன;

உலகப் பெரும்போரினைத் தவிர்க்கவும் உலக நாடுகளோடு பாரபட்சமின்றி நட்புக்கொள்ளவும், உள்நாட்டில் மக்களுடைய வாழ்க்கையில் மறுமலர்ச்சி காணவும் பயன்படக் கூடிய வகையில் "கூட்டுச் - சேராக் கொள்கை" கடைப்பிடிக்கப்படுகின்றது;

உலக ஒருமைப்பாட்டிற்குக் கேடின்றி பாரதத்தில் 'சகோதர அறம்' (தேசிய ஒருமைப்பாடு) நிலவச் செய்வதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன.



இந்தச் சீரிய செயல்முறைகள்-கொள்கைகள் அனைத்தும் காந்தியடிகள் நமக்குத் தந்த போதனைகளின் விளைவு என்பதோடு, நம் அருட்பிரகாச வள்ளலாரின் ஆன்ம

நேய ஒருமைப்பாட்டுரிமைச் சித்தாந்தத்திற்கு ஏற்றவை என்பதையும் நாம் நினைவிற்கொள்ள வேண்டும்.

சுருங்கச்சொன்னால், தமிழகத்தில் "ஜோதி" வடிவாக விளங்கிய இராமலிங்கர் வடக்கில் "காந்தி" வடிவிலே காட்சியளித்தார் என்று சொல்லலாம்.

தெற்கில் இராமலிங்க வள்ளலார் உபதேசித்த போது ஏற்காத கொள்கைகளை, வடக்கில் தோன்றிய மோகன்தாஸ் கரம்சந்திர காந்தி சொன்னபோது வாழ்த்தி வழிபட்டு வரவேற்றனர் தமிழ் மக்கள். இதனை முன் கூட்டி அறிந்தே,

"நான் இப்போது உங்களுக்கு வீணில் சொல்லும் சிறந்த உண்மைகளையே வடக்கில் மகாத்மாக்கள் தோன்றி உங்களுக்குச் சொல்வார்கள். அப்போது நீங்கள் தெரிந்துகொண்டு மதித்து நடப்பீர்கள்" என்று தமிழ் மக்களைப் பார்த்துக் கூறிச்சென்றார் இராமலிங்கர்.

இராமலிங்கர், மதங்கள் அனைத்தையும் வெறுத்தாராயினும் அம்மதங்கள் வலியுறுத்திய அறங்களை வெறுத்தாரல்லர். ஆம்; அறங்களை ஆதரித்தார்; பொருளற்ற அனுஷ்டானங்களை வெறுத்தார். இன்னொரு வகையில் சொன்னால், தத்துவங்களை விரும்பினார்; போலிச் சடங்குகளை வெறுத்தார்.

"ஒரு தேசத்தைச் சார்ந்தவராகயிருந்தால்தான் சர்வதேசத் தலைவராகவும் இருக்க முடியும். அதுபோல் ஒரு மதத்தைச் சார்ந்தவராக இருந்தால்தான் எல்லாச் சமயங்களையும் அறிந்து சமரச வாதியாக இருக்கமுடியும்.

இது காந்தியடிகளின் கருத்து. இதன்படியே, தாம் உண்மை இந்துவாகவும், அதே நேரத்தில், உலக மதங்கள் அனைத்துக்குமே உற்ற நண்பராகவும் வாழ்நாள் முழுவதும் இருந்து வந்தார் காந்தியடிகள். இந்த விளக்கத்தை நினைவில்கொண்டால், சமயத் துறையில் காந்தியடிகளுக்கும் வள்ளலாருக்கும் இருந்த கருத்து ஒற்றுமையைப் புரிந்துகொள்ளலாம்.

சமயத்துறையில் காந்தியடிகளுக்கும் வள்ளலாருக்கும் இருந்த கருத்து ஒற்றுமையை இன்னும் சிறிது விரிவாக அறிவது அவசியமாகும். காந்தியடிகள், அந்நிய மதங்களின் படையெடுப்பால் அழிந்துகொண்டிருந்த இந்து மதத்திற்குப் புத்துயிர் கொடுத்தார். அரசியலுக்கும் அறத்திற்கும் வேறுபாடு அதிகரித்துக்கொண்டே இருந்த நேரத்தில் அதனை அகற்றிஇரண்டுக்குமிடையே பழைய காலத்தில் இருந்ததினும் சிறந்த தான ஒற்றுமையை ஏற்படுத்த முயன்றார்.

சநாதனிகளின் கொடுமையை வெறுத்து இந்து மதத்திலிருந்து நாள்தோறும் வெளியேறி, பிற மதங்களைத் தழுவிக்கொண்டிருந்த தாழ்த்தப்பட்ட-பிற்பட்ட சாதிகளின் மக்களுடைய வாழ்க்கை நலன்களுக்கும், உரிமைகளுக்கும் பரிந்து பேசி, எஞ்சியிருந்தவர்களையெல்லாம் இந்து மதத்திலேயே நிறுத்திவைக்கப்பாடு பட்டார். அதே நேரத்தில், மத வேற்றுமைகளை, அவை காரணமாக வளர்ந்த விரோதங்களை அகற்றி, சர்வ மதங்களிடையே ஒருமைப்பாட்டை வளர்க்க முயன்றார்.

வடலூர் முனிவர் சைவத்தைத் துறக்காமல்-சைவ நெறியிலிருந்து பிறழாமல் வாழ்ந்த நிலையில்தான், பல

சமய தத்துவங்களிடையே சமரசம் காண விழைந் தார். மத (ஸ்தாபன) வேற்றுமைகளை ஒழிக்க முயன்ருர். அந்த யாத்திரையிலே மதமற்ற சமுதாயம் காண்பதைத் தமது இறுதி இலட்சியமாகக் கருதினர்.

பொதுவாக வார்தா முனிவர் காந்தியடிகளும் சரி, அவருக்கு வழிகாட்டியாக வாழ்ந்த வள்ளலாரும் சரி; தங்கள் சொந்த மதத்தவர்களாலேயே துன்புறுத்தப் பெற்றனர். நல்லவேளையாக அத்தகையவர்கள் சில ராகத்தான் இருந்தனர் என்பதொன்றே நமக்குள்ள ஆறுதல்.

மதவாதிகளிலே சிலர் அல்லது பலர் மக்களை ஏமாற்றுகிருர்கள் என்பதற்காக, ஒழுக்கத்தைப் போதிக் கும் உபதேச நெறிகளை வெறுப்பதோ, தத்துவ சாஸ்திரங்களை பழிப்பதோ அறிவுடைமையாகாது. வள்ளலாரும் காந்தியடிகளும், ‘சீர்திருத்தக்காரர்கள்’ என்ற வகையில், மதத்தின் பெயரால் மக்களை ஏமாற்று பவர்களை எதிர்த்தனராயினும், ஒழுக்கத்தையும் மகான்கள் போதித்த தத்துவங்களையும் போற்றினுர்கள்.

நான், காந்தியடிகளை, அரசியல் துறையில் மட்டு மல்லாமல் ஆத்மார்த்த துறையிலும் பின்பற்ற முயன்று வருபவன். அந்த முயற்சியில் நான் பெற்ற அனுபவத் தைக்கொண்டு, அவரை வள்ளலாரோடு ஒப்பிட்டு ஆராய்ந்ததில், தென் பாரதத்தில் தோன்றி மறைந்த வள்ளல்பெருமானுகவே வடபாரதத்தில் பிறந்த கரம் சந்திர காந்தி காட்சியளித்தார் என்று நம்புகிறேன். ஆம்; ‘மறுபடியும் வருகிறேன்’ என்று சொல்லிவிட்டு மறைந்த வள்ளல்பெருமானின் பிரதிநிதியாகவே வடக்கில் பிறந்து பாரதம் முழுவதற்கும் தலைவராக

விளங்கிய காந்தியடிகளை நாம் கருதவேண்டும். இது, அந்தப் பெரியோர்களிடம் நான் கொண்டுள்ள பக்தி காரணமாகப் பிறந்த நம்பிக்கையாகவே இருக்கலாம். ஆயினும், இந்த நம்பிக்கை என்னளவில் நல்ல பலனைத் தந்திருப்பதால், என்னைப்போலவே எல்லோரும் நம்ப வேண்டுமென்று பிரார்த்திக்கின்றேன்.

வள்ளலாருடைய உபதேசங்களைக் காந்தியடிகளின் உபதேசங்களோடும் வாழ்க்கை நிகழ்ச்சிகளோடும் ஒப்பிட்டுப் பார்த்துப் பொருள் காணவேண்டும். அப்போது நான் சொல்வதிலுள்ள உண்மை புரியும்.

''பாரதி-கட்டுரைகள்'' என்னும் நூலில் 'தமிழ் நாட்டின் விழிப்பு' என்ற தலைப்பின் கீழ் இராமலிங்க வள்ளலார் பற்றி சுப்ரமணிய பாரதியார் வெளியிட்டுள்ள கருத்து வருமாறு:

''எம்மதமும் சம்மதம்'' என்றார் ராமலிங்க சுவாமி. ''உலகத்திலுள்ள மத பேதங்களையெல்லாம் வேருடன் களைந்து சர்வ சமய சமரசக்கொள்கையை நிலைநாட்ட வேண்டுமானால், அதற்குத் தமிழ்நாடு சரியான களம். உலகம் முழுவதும் மத விரோதங்கள் இல்லாமல் ஒரே தெய்வத்தைத் தொழுது உஜ்ஜீவிக்கும்படி செய்ய வல்ல மகான்கள் இப்பொழுது தமிழ் நாட்டில் தோன்றியிருக்கிறார்கள். அதுபற்றியே, பூமண்டலத்தில் புதிய விழிப்புத் தமிழகத்திலே தொடங்கும் என்கிறோம்.

''பூமண்டலம் அனைத்துக்குமே புதிய விழிப்பு தருவதற்கான முதல்வராக இராமலிங்கர் தோன்றினார்'' என்றும் பாரதியார் கூறுவது சிந்திக்கத்தக்கதாகும்.

அடிகளார் துவக்கிவைத்துப்போன ஆன்மநேய ஒருமைப்பாட்டு இயக்கம், அநேகமாக அவரோடு மறைந்துவிட்டதென்றே சொல்லலாம். வள்ளலாருக்

குப் பிறகு தமிழகமெங்கும் சமரச சுத்த சன்மார்க்க சங்கங்கள் ஏராளமாகத் தோன்றின. அவற்றுள் இறந்தவை போக, இருப்பவை ஆயிரத்துக்கு மேற்பட்டவை என அறிகிறேன். ஆனால், அவையனைத்தும் ப ஜ னை க் கூடங்களாக-பக்தி நெறி பரப்பும் நிலையங்களாகவன்றி அடிகளாரின் அடிச்சுவற்றைப் பின்பற்றி, சமய-சமூக சீர்திருத்த அமைப்புக்களாகச் செயற்படவில்லை.

பாரதத்தில் தோன்றியுள்ள தேசிய ஒருமைப்பாடு காணும் பேரியக்கம், வள்ளலாரின் "ஆன்ம நேய ஒருமைப்பாட்டுரிமைக்கு" ஒளி காட்டுவதாக இருக்கிறது. அந்த ஒளியிலே, வள்ளலாரை உலகுக்கு அறிமுகப்படுத்த தமிழர் முயலவேண்டும். காந்தியடிகளையும் பாரதியாரையும் போற்றும் தமிழகம், வள்ளலாரைப் புறக்கணிக்க முடியாது; புறக்கணிக்கவும் கூடாது.

தேசிய ஒருமைப்பாட்டிற்குத் தடையாக இருப்பவை, சாதி மத வேறுபாடுகளே ஆகும். அந்த வேறுபாடுகளை அழித்து, ஆன்மநேய அடிப்படையில் சமுதாய ஒருமைப்பாடு கண்டாலன்றி, அரசியல் வழிப்பட்ட தேசிய ஒருமைப்பாடு சாத்தியமில்லை. "எல்லோரும் ஓர் இனம்" என்பதனை முதலில் வலியுறுத்திப் பின்னரே "எல்லோரும் இந்திய மக்கள்" என்று பாடினார் பாரதி. ஆம்; பாரத மக்களிடை, "எல்லோரும் ஓர் குலம்-ஓர் இனம்" என்ற ஒற்றுமையுணர்வு தோன்றாதவரையில், "எல்லோரும் இந்தியர்" என்ற தேசிய ஒருமைப்பாட்டுணர்வு தோன்றாது என்பதைச் சொல்லாமல் சொல்கின்றார் பாரதியார். இந்த உணர்வை அவர் வள்ளாரிடமிருந்தே பெற்றிருக்க வேண்டும்.

இன்றைய பாரத-தமிழக மக்களிடையே பிரிவினையுணர்வு, அரசியல் வடிவத்தில் பிறந்திருக்கிறதென்றால், அதற்கு அடிப்படைக் காரணம், சமுதாய ஒருமைப்பாட்டுணர்வு தொலைந்து சாதி-சமயப் பிரிவு உணர்ச்சி வளர்ந்திருப்பதுதான். அதுவே மூலநோய். அந்த மூல

நோயினைத் தீர்க்கும் ஒரே மருந்து 'உலக சமுதாய ஒருமைப்பாட்டுணர்வு' தான். அதன் மற்றொரு பெயரே 'ஆன்மநேய ஒருமைப்பாடு'.

'ஆன்மநேய ஒருமைப்பாடு' என்பது உலக சமாதான இயக்கத்தின் கொள்கையாக வேண்டும். அதுவே போர் வெறியிலிருந்து உலகத்தைக் காக்கும் புனித வாசகமாகும்.

இராமலிங்க அடிகளார், தமிழகத்தில்-தமிழ் இனத்தில் பிறந்திருந்தாலும், தமிழிலே பாடியிருந்தாலும், உலகனைத்துக்கும் அவர் பொதுவானவர். அவர், உலகனைத்தையும் ஒன்றுபடுத்த வந்தசர்வதேச-சர்வமத சமரசவாதி; மரணமிலாப் பெருவாழ்வினைப் போதிக்க வந்த சித்தர்.

நாம் அணுக்குண்டு யுகத்தில் வாழ்ந்து கொண்டிருக்கின்றோம்; உலக சமாதானத்தைப்பற்றி அதிகமாகப் பேசிக்கொண்டிருக்கிறோம். அணுக்குண்டு பயம் தொலைந்து, உலக சமாதானம் நிலைபெற வேண்டுமானால், அதற்கான ஒரே வழி, ஆன்மநேய ஒருமைப் பாட்டுரிமை நெறிதான். இந்திய தேசிய ஒருமைப்பாடு பேசுவோர் உலக ஒருமைப்பாட்டின் ஒரு அங்கமாகவே அதனைக் கருத வேண்டும். இன்று சொல்லப்படும் சர்வதேசியம் (இன்டர் நேஷனலிஸம்) வள்ளலார் காண விரும்பிய ஆன்மநேய ஒருமைப்பாடுதான். பிரிவினை-பிளவு சக்திகளை ஒழித்து, இந்திய தேசிய ஒருமைப்பாடு காணத் துடிப்போர், 'வள்ளலார் வழி'யில் நின்று பணி புரிவார்களாக.

இந்திய தேசிய ஒருமைப்பாட்டினை விரும்புவோருக்கும், உலகப் பாட்டாளி வர்க்கத்தின் ஒற்றுமையை நாடுவோருக்கும் மிகச்சிறந்த வழிகாட்டியாக விளங்குகின்றார் வடலூர் இராமலிங்கர். அவர் கூறிய உலக ஒருமைப்பாட்டை இன்றைய தேசிய-சர்வ

தேசிய வாதிகள் காண வேண்டுமானுல், சாதி வேற்றுமைகளை வேரும், வேரடி மண்ணுமில்லாமல் ஒழித்தாக வேண்டும். மதபேதங்களை மறைத்தாக வேண்டும். தெய்வம் உண்டு என்று நம்பி, அதுவும் ஒன்றே என்பதை உள்ளத்தில் பதிய வைத்து, உயிர்கள் தோறும் அத்தெய்வம் காட்சியளிப்பதைக் கண்டு, உயிர்களுக்குத் தொண்டு செய்வதன் மூலம் அந்த ஒரே தெய்வத்தை வழிபட்டு, அதன் மூலம் தேசிய-சர்வ தேசிய ஒருமைப்பாடு காண முயல வேண்டும்.

சாதிகளை ஒழிக்கும் புனிதப் பணியில் ஈடுபடுவோமானுல், சாதி உயர்வு-தாழ்வு கொடுமையையேனும் ஒழித்து "எல்லோரும் ஓர் நிறை-எல்லோரும் ஓர் நிலை" என்ற சமத்துவத்தை நிலைநாட்ட இயலும். அதனுல், சாதிகளை ஒழிக்கச் சமரச சன்மார்க்க நெறி போதித்த பெருமானை நெஞ்சில் வைத்து அஞ்சலி செய்வோமாக!

"போதித்த மதங்களெல்லாம் பொய் பொய்யே அவற்றில் புகுதாதீர்" என்ற கோஷத்தால் மதப்பூசல்களும் போராட்டங்களுமேனும் தொலையுமாதலால் மத வேற்றுமை ஒழியப் பணியாற்றிய மகாகவி இராமலிங்கரை வாழ்த்துவோமாக!

ஈ-எறும்பு ஆகிய உயிர்கள் அனைத்திடமும் இரக்கம் காட்டும் ஜீவகாருண்ய ஒழுக்கத்தினை வாழ்க்கை நெறியாக வற்புறுத்தினுல், ஆறு அறிவு படைத்த மக்களிடையேனும் அன்பு செலுத்தும் பண்பு வளரும். அதனுல் ஜீவகாருண்ய ஒழுக்கம் போதித்த உத்தமருக்கு நம் உள்ளத்தைக் கோயிலாக்குவோமாக!

தமிழகமே! பாரதமே! உலகப் பெருநிலமே! ஆன்மநேய ஒருமைப்பாடு காணத்திரண்டெழுக! மனிதகுலமே! உன்னை வாழ்விக்கவந்த வள்ளற் பெருமானை வாழ்த்து! வாழ்த்து!! வாழ்த்து!!! நீ வாழ அதுவே வழி!

"இராமலிங்கம்" என்னும் பெயர் ஒவ்வொரு மனிதரும் இடையருது ஓதவேண்டிய மந்திரமாக வேண்டும். இதுவே என் பிரார்த்தனை!

இந்தக் கையேட்டினைப் படித்தபின் வள்ளலாரைப் பற்றி மேலும் அறிய விரும்பும் அன்பர்கள் ஆசிரியர் எழுதிய "வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு" என்னும் நூலை வாங்கிப் படிப்பார்களாக.

வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு
மலிவுப் பதிப்பு ரூ.3. நூலகப் பதிப்பு ரூ. 6

வெளியீடு :

இன்ப நிலையம்

கச்சேரி ரோடு, சென்னை-4.

## காந்தி இலக்கிய மன்றம்

சமூகம், சமயம், அரசியல், பொருளாதாரம், கலை, இலக்கியம், உலக சமாதானம் முதலான பல்வேறு துறைகளைப் பற்றி மாதம் இரண்டு ஏடுகள் வீதம் ஓராண்டில் 24 ஏடுகள் வெளியிடத் திட்டமிட்டிருக்கிறோம்.

ஒவ்வொன்றின் விலை 50 காசுகள்;
எனினும் ரூ. 10/-க்கே
இவையனைத்தையும் பெறலாம்.

## தமிழ்நாடு காந்தி நினைவு நிதி

மதுரை-13.

சங்கம் பிரிண்டர்ஸ், மதுரை-1.